மலர் 15
இதழ் 34

கல்கி

மன்மத ௵
பங்குனி 12

25, மார்ச் 1956.

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

இன்று முதல்

சென்னையில் பாரகன் - மகாராணி - உமா

மற்றும்

தென்னாடெங்கும்

நாரசு ஸ்டுடியோஸ்

# பிரேமபாசம்

தமிழ்



வேதாந்தம் ராகவய்யா

சாம்ரியா ரிலீஸ்

BHARAT STUDIO



மலர் 15
இதழ் 34

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு
பங்குனி 12

# ராஜ்ய மசோதா

எதிர்பார்த்தபடி புது ஏற்பாடுச் சட்ட மசோதா பிரசுரமாகி விட்டது. "வேண்டாம், என்பவர்களை வற்புறுத்த மாட்டோம்" என்று மத்திய சர்க்கார் சொன்னபடியே தென் தேசம் மூன்று பிரிவுகளாக — மலையாளம், கன்னடம், தமிழ் இந்த மூன்று தொகுதி மக்களைப் பிரித்தே அமைக்கப்பட்டிருக்கிறது. படங்களில் காட்டப்பட்டிருக்கும் அளவைக் காட்டிலும் தமிழ் ராஜ்யத்தின் அளவு கொஞ்சம் சிறியதேதான். இப்படிப் பிரிந்திருந்தால்தான் தேர்தல்கள் சுலபமாக முடித்துக் கொண்டு ஸ்தானங்களைப் பெறலாம். ஆனால் நம்முடைய மராமத்து இலாக்கா மந்திரி மேற்கே பெய்து கடலில் சேரும் தண்ணீருக்கு ஆசைப்படுகிறார். "உதவுங்கள்" என்று மலையாள குலத்தை வேண்டிக் கொள்கிறார். வேண்டுகோளைக் கேட்பதற்கு வேண்டிய நட்பை வளர்க்காமல் இப்போது வேண்டுகோள் விடுத்து என்ன பயன்? "வருகிறோம்" என்று சொன்னபோது "வேண்டாம்" என்று சொல்லி விட்டோம். மறுபடியும் மன மாறுதல் ஏற்படுவதற்கு வேண்டிய முயற்சியைச் செய்ய வேண்டும். மொத்தத்தில் அதிகாரம் முழுதும் தில்லியை நோக்கிச் சென்று வருகிறது. அந்தக் காரியமாவது சீக்கிரம் முடிந்து தீர்ந்தால் க்ஷேமம்.

அகில இந்திய காங்கிரஸில் ஏகோபித்துச் செய்யப்பட்ட தீர்மானத்தைச் சென்னை ஆட்சிக் காங்கிரஸ்காரர்கள் வங்காளக் கடலில் எறிந்து மூழ்கடித்து விட்டார்கள். அந்தத் தீர்மானத்தை ஆதரித்துச் சென்னை நிதிமந்திரி அமிருதசரஸில் மிக உருக்கமாகப் பேசினார். சென்னை முதல் மந்திரியும் சபையில் அமர்ந்திருந்தார். ஆட்சேபிக்கவில்லை. அறுபத்தோராவது காங்கிரஸ் மகாநாட்டில் ஏகமனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை மொழிபெயர்த்துக் கீழே தருகிறோம். கொஞ்சம் நீண்டதாயினும் வாசகர்கள் படித்து அறிய வேண்டிய விஷயம்.

## காங்கிரஸ் தீர்மானம்

சமீபத்தில் ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் சிபாரிசுகளின் மீது நடைபெற்ற கலவரங்களைக் கண்டு காங்கிரஸ் மிகுந்த வருத்தம் அடைந்திருக்கிறது. காங்கிரஸ் செயற் குழு, இக் கலவரங்களைக் கண்டு தேசமக்களுக்குச் சென்ற மாதம் விடுத்த வேண்டுகோளைப் பரிபூரணமாக இக் காங்கிரஸ் மகாநாடு ஆதரிக்கிறது.

முப்பதாண்டுகளுக்கு முன்பு காங்கிரஸ் மொழிவழி மாகாணங்களை ஆதரித்தது. அன்று அந்நிய ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆங்கிலம் தெரிந்த மக்களுக்கும் ஆங்கிலம் தெரியாத மக்களுக்குமிடையே பெரிய தடுப்புச் சுவர் இருந்தது. இந்தப் பெரும் தடுப்புச் சுவரை அகற்ற வேண்டும் என்பது அன்றைய இலட்சியமாக இருந்தது. அத்துடன் அன்று இந்திய மொழிகளை வளர்ப்பதும், அவற்றுடன் சேர்ந்த பண்பாட்டை வளர்ப்பதுமே, காங்கிரஸின் இலட்சியங்களாக இருந்தன. அதற்காகக் காங்கிரஸ் தன் நிர்வாக சௌகரியத்தை உத்தேசித்து மொழி வழி மாகாணங்களை ஏற்படுத்தியது. அன்று ஆண்ட அரசாங்கம் வகுத்திருந்த மாகாணங்களின் எல்லைகள் எப்படியிருப்பினும், தன் சௌகரியத்துக்காகக் காங்கிரஸ் மொழி வழி மாகாணங்களை ஏற்படுத்தியது. இது அன்றைய அரசியல் கிளர்ச்சிகளில் காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டியிருந்த முக்கியப் பணிகளுக்காக அவசியமாக இருந்தது.

பாஷை என்பது முக்கியமான விஷயமே. இன்று பாரதம் சுதந்திரம் அடைந்து விட்டது. சுதந்திர பாரதத்தின் அரசியல் நிர்ணயச் சட்டம் பாரதத்திலுள்ள மிகப் புராதனமான பெரிய மொழிகள் என்னென்ன என்று கணக்கெடுத்திருக்கிறது. அந்த

மொழிகளை எல்லா வகையிலும் வளர்க்கப் பேராதரவும் ஊக்கமும் அளிக்க வேண்டும் என்று அரசியல் நிர்ணயச் சட்டத்தில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. ஆகவே இம்மொழிகளை, கல்வித் துறை, சர்க்கார் நிர்வாகம், கலைத் துறை ஆகியவைகளில் நாளுக்கு நாள் படிப்படியாக அதிகமாக உபயோகித்து வளர்க்க வேண்டியது மிக அவசியம்.

ராஜ்ய எல்லைகளை நிர்ணயிக்கும் விஷயத்திலும் மொழியைப் பற்றி எண்ண வேண்டியதுதான். என்றாலும், அது மற்ற எல்லா அம்சங்களையும் புறக்கணித்து விடக்கூடிய அளவுக்குப் பெரிய விஷயமாகாது. ஏற்கனவே இந்த உண்மையைக் காங்கிரஸ் எடுத்துக் கூறியுள்ளது. ராஜ்யப் புனர் நிர்மாணக் கமிஷனும் இதை ஒப்புக் கொண்டிருக்கிறது. பாரதத்தின் சக்தி அதன் ஐக்கியந்தான். ஆனால் மொழி உணர்ச்சிக்கு, மக்களிடையே பிரிவு மனப்பான்மையை வளர்க்கும் அளவுக்கு இடம் கொடுத்தால் பாரதத்தின் அடிப்படை ஒற்றுமைக்கே தீங்கு விளைந்து விடுகிறது. மேலும் சுபிட்சப் பாதையில் வேகமாக முன்னேறி வரும் இக்காளில், மொழியின் அடிப்படையில் எல்லை வகுப்பதைவிட இன்னும் எத்தனையோ முக்கிய விஷயங்கள் நாம் யோசிக்க வேண்டியவை யிருக்கின்றன. ஆகவே ஒரு பிரதேசத்தின் எல்லையை மொழியின் அடிப்படையில் மட்டும் வகுப்பது அப் பிரதேசத்தின் பொருளாதார வளர்ச்சிக்கே நீங்காகி விடுகிறது. அந்தப் பிரதேசத்தின் இயற்கை வளங்களைத் தக்கபடி உபயோகித்துக் கொள்வதற்கு இடையூறாகப் போய் விடுகிறது.

சுதந்திரம் அடைந்த பிறகு நம் நாட்டில் பெரும்பாலான வேலைகள் பொருளாதார வளர்ச்சியை அடிப்படை நோக்கமாகக் கொண்டு நடத்தப்பட்டு வருகின்றன. உற்பத்தியைப் பெருக்குதல், நாட்டின் பயனில் எல்லாருக்கும் சம பங்கு கிடைக்க வழி வகுத்தல், வாழ்க்கைத்தரம் உயர்த்தல் — இவையே நாட்டின் முக்கிய வேலைகளாக இருக்கின்றன. இப்பணிக்கு இடையூறாகவும் நாட்டின் ஒற்றுமைக்குக் குந்தகமாகவும் தோன்றும் எந்த விஷயமும் தீங்கே யல்லவா!

மொழியின் அடிப்படையில் பிரிக்கப்படும் ராஜ்யங்களுக்கிடையே கலவரங்கள் ஏற்பட்டு, பாரத தேசத்தின் நன்மையை விடத் தன் மாகாண நலனே மேலானது என்ற உணர்ச்சி ஏற்பட்டால், அப்போது மொழி புணர்ச்சியானது தன் வரம்பை மீறி விஷமாகி விட்டது என்று தான் கொள்ள வேண்டும்.

இதைத் தவிரச் சில மக்கள் தங்கள் விருப்பத்தை, மற்றவர்களின் மீது பலாத்கார முறையில் திணிக்கத் தொடங்குகிறார்கள். அதனால் பூசலும் கலவரமும்தான் விளைகின்றன. இந்தக் கலவரத்தின் பொருள் ஜனநாயக முறையில் நாம் வாழ விரும்பவில்லை, நாம் பொருளாதாரத் துறையில் முன்னேற விரும்பவில்லை என்பதுதான். என்றென்றும் குறுகிய மாகாண வெறிக்கு நாம் உள்ளாகிக் கிடக்க வேண்டியதுதான்.

ஒரே மொழி வழங்கும் பெரிய பிரதேசங்கள் பாரத தேசத்தில் இருக்கின்றன. என்றாலும் இரு மொழிகள் பேசப்படும் பகுதிகளும் இருக்கத்தான் செய்கின்றன. இந்த இருமொழிப் பிரதேசம் சம்பந்தமாகத்தான் சர்ச்சைகளும் கலவரங்களும் உணர்ச்சி மோதல்களும் நிகழ்கின்றன. இந்தப் பிரதேசத்தை ஒரு மொழி ராஜ்யமாக்கி விட முயல்வது, மற்ற மொழி பேசுபவர்களுக்குப் பெருந் துரோகம் செய்வதாகும். முன்னேற்றப் பாதையில் செல்லும் ஒரு நாட்டில், மக்கள் மொழி பேதமின்றி ராஜ்யத்தின் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குச் சகஜமாகப் போய் வருவார்கள். ஆனால் ஒரு மொழி ராஜ்யம் என்று எல்லை வகுத்து விட்டால் இந்தச் சகஜமான போக்குவரத்துத் தடை பட்டுப் போகும். மேலும் ஒரு மொழி ராஜ்யத்தின் காரணமாக ஏற்படும் கட்டுப்பாடு, எந்த வகை மாறுதலுக்கும் இடம் தராமல் தேசத்தை ஸ்தம்பிக்கச் செய்யும். மாறுதல் விரும்பாத சமுதாயத்துக்கு வேண்டுமானால் இந்த நிலை, பொருத்தமாக இருக்கலாம். ஆனால் வளர்ச்சியை விரும்பும், பொருளாதாரச் சுபிட்சத்தை நோக்கிச் செல்லும் சமுதாயத்துக்குச் சற்றும் பொருந்தாது. அரசியல் நோக்கங்களுக்காகவும், சர்க்கார் நிர்வாக வசதிக்காகவும் வளர்க்கப்படும் இந்தக் குறுகிய மாகாணப் பித்து, மனிதனின் மனோபாவத்தையே குறுகச் செய்து விடுகிறது. இதுதான் மிகப் பெரிய தீங்காக இருக்கிறது. மக்கள் விசால மனப்பான்மையும், எல்லாவித மக்களோடு தோளோடு தோள் சேர்த்து நின்று தேச முன்னேற்றப் பணியில் வேலை செய்யும் கூட்டுறவுப் பண்பும் பெற்றவர்களாக விளங்க வேண்டும் என்று இந்தியா விரும்புகிறது. இதற்கு இடையூறாக இருக்கும் எந்த மனப்பான்மையையும் கண்டிக்க வேண்டும்!

புது ராஜ்ய ஏற்பாட்டு விஷயத்தில் வேறு சில பிரச்னைகள் எழுகின்றன. அவை சின்னஞ்சிறு பகுதிகளைப் பற்றியவை யாகும். இந்தச் சிறு பகுதிகள் முன்னேறுவதற்குப் பெரும் பகுதிகளின் ஒத்துழைப்புத் தேவைப்படுகிறது. ஆகவே திட்டத்தின்படி தேசம் முன்னேறவும் நிர்வாக வசதிக்காகவும் பெரும் ராஜ்யங்கள் ஏற்படுத்துவது அவசியமாகிறது.

ராஜ்யங்களின் பரிமாணம் பெரிதாக இருப்பதும், பூகோள அமைப்பும் தவிர நாம் சிந்திக்க வேண்டிய வேறு விஷயங்களும் இருக்கின்றன. அவற்றில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை நமது ராணுவத் தற்காப்பு, இயற்கை யளிக்கும் மூலப் பொருள்களின் வளம். இந்த விஷயங்களிலும், நாட்டுக்குப் பெருத்த லாபம் கொடுப்பது எது என்பதை மனத்தில் கொண்டு, ராஜ்யப் புனரமைப்பு சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

இத்தகைய பிரச்னைகளைச் சமாளிக்கவும், பொதுமக்களின் விருப்பத்துக்கிணங்க ஒரு முடிவுக்கு வரவும் பாரத தேசத்தின் அரசியல் நிர்ணயச் சட்டம் வழி காட்டுகிறது. அதுதான் நமது ஜனநாயக ஆட்சி. இந்த ஜனநாயக ஆட்சியில் மக்கள் தங்கள் கருத்து வேறுபாட்டை வெளியிட்டு முடிவு காண வேண்டும். பலாத்காரமும், ஹிம்சை முறைகளும் கையாளுதல் பாரதநாடு எந்த நற்பண்புகளுக்காக உலக அரங்கில் புகழ் பெற்று விளங்குகிறதோ, அப்புகழுக்கு மாசு தேடுவதாகும்.

ஒரு மொழி, அதன் பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்காக ராஜ்யத்தில் அம்மொழி பேசப்

# தாயின் துயரம்




ராஜ்யப் புனரமைப்புச் சட்ட மசோதா சமீபத்தில் வெளியாகியிருக்கிறது.

படும் பிரதேசம் தனித் தொகுதியாக இயங்கலாம். இவ்வகையில் கூறப்படும் யோசனைகளைக் காங்கிரஸ் வரவேற்கிறது. இத் தொகுதி முறையில் மொழி வாரி மாகாணம் என்ற உணர்ச்சியும் ராஜ்யத்தின் பெரு நலன்களும் காப்பாற்றப்பட்டு விடுகின்றன. ஒரு மொழி ராஜ்யம் ஏற்படுத்தக் கூடிய இடங்களில் ஏற்படுத்தலாம். ஆனால், மற்ற எல்லாக் காரணங்களையும் விட 'ஒரு மொழி ராஜ்யம் ஏற்படுவதுதான் முக்கியம்' என்று வற்புறுத்தலாகாது. இன்று இந்தியாவில் நிலவும் சூழ்நிலையை எடுத்துக் கொண்டாலும், தேசத்தின் பல பகுதிகளில் நடைபெற்று வரும் பல சுபிட்சத் திட்டங்களைப் பார்க்கும் போதும் எங்கெல்லாம் இரு மொழி ராஜ்யங்கள் ஏற்படுத்த முடியுமோ அங்கெல்லாம் ஏற்படுத்தி அந்தந்த மொழி பேசப்படும் தொகுதிக்குப் 'பிரதேச ஆலோசனைக் குழு' ஏற்படுத்துவதே உசிதம்.

பிகாரும் மேற்கு வங்கமும் இணைவதைக் காங்கிரஸ் வரவேற்கிறது. இந்த இணைப்பை ரொம்பவும் ஆர்வத்துடன் காங்கிரஸ் வரவேற்கிறது. ஏனெனில் பாரத நாட்டின் வள மிக்க உலோகங்கள் உள்ள வயல்களும் பெரும் தொழிற்சாலைகளும் இந்த இரு ராஜ்யங்களிலும்தான் இருக்கின்றன. அதனால் இந்த இணைப்பின் காரணமாக இந்த வேலைகளை மத்திய சர்க்கார் வேகமாகவும் வங்க பிகார் மக்களுக்குப் பயனளிக்கும் வகையிலும் நடத்தலாம். ஆகவே எங்கெல்லாம் உலோகக் கனிகள், தண்ணீர் வசதிகள், மின்சார வசதிகள் முதலியன இருக்கின்றனவோ அந்தப் பகுதி ராஜ்யங்களும் பிகார்–வங்கம்போல் இணைந்தால் தேசத்தின் சுபிட்சத் திட்டத்தை நிறைவேற்ற மிக்க வசதியாக இருக்கும்.

ஆகவே, இம்முறையில் தென்னாட்டிலும் தேசத்தின் மற்றப் பகுதிகளிலும் உள்ளவர்கள் சிந்தித்து இணைய முயல்வார்கள் என்று காங்கிரஸ் எதிர்பார்க்கிறது. இந்த இணைப்பு, மொழி, பண்பாடு இவற்றிற்கு இடையூறாக என்றும் இருக்காது. அதற்கு மாறாக இரு ராஜ்யங்களுக்கும் பொதுவாக நலன்கள் விளையக்கூடிய முறையில் இயற்கை வளங்களைப் பயன்படுத்த உதவும். மேலும் சமீப காலத்தில் வளர்க்கப்பட்ட குறுகிய மொழிவழி மாகாண உணர்ச்சி காரணமாக நிலவுகிற பிரிவு மனப்பான்மையைப் போக்கி தேசத்தின் ஒற்றுமையை உறுதிப்படுத்தும். ராஜ்யப் புது ஏற்பாட்டுக் கமிட்டியின் அறிக்கையின் மீது உண்டாகியுள்ள சர்ச்சைகளுக்குப் போதிய காரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன. என்றாலும் அவை அராஜகக் கலவரங்களுக்கு இடம் கொடுத்துவிட்டன. தேசத் துரோக எண்ணம் கொண்டவர்களுக்கும் பாரதத்தின் ஐக்கியத்தைக் குலைப்பதில் நாட்டம் கொண்டவர்களுக்கும் நல்ல வாய்ப்பை அளித்து விட்டன. இதை அடியோடு நிறுத்த வேண்டும்.

காங்கிரஸ் இதை இவ்வளவு தீனமாக விளக்கியிருப்பதற்குக் காரணம் மக்கள் மனத்தில் நிலவும் தவறான எண்ணங்களைப் போக்கித் தேசத்துக்கு வழி காட்ட வேண்டும் என்பதே. இந்த விஷயத்தைத் தேச முழுவதின் முன்னேற்றத்தையும் பெருவாரியான ஏழைப் பொது மக்களின் சுபிட்ச வாழ்வையும் மனத்தில் கொண்டு நோக்க வேண்டும். மக்கள் இந்தப் பிரச்னைகளை விருப்பு வெறுப்பின்றிச் சிந்திப்பார்கள் என்று காங்கிரஸ் நம்புகிறது. விசேஷமாகக் காங்கிரஸ்காரர்கள் ஆற்ற வேண்டிய கடமை ஒன்றிருக்கிறது. அவர்கள் காங்கிரஸின் ஒழுக்கத்தை நிலைநாட்டிக் காப்பாற்ற வேண்டும். அதன் மூலமாகத் தேசத்தின் ஒற்றுமையையும், பண்பையும் உலகுக்கு நிரூபிக்க வேண்டும்.

இவை நமது வார்த்தைகள் இல்லை. முழுவதும் காங்கிரஸின் அசல் தீர்மானம்!

# தமிழ் முனிவர் திருவிழா

இந்த மண்ணுலகிலே 'ஈருடலும் ஓருயிரும்' என்று சொல்லக்கூடிய விதத்தில் அத்தனை அன்னியோன்னியமாக நெருங்கி வாழ்ந்து வந்த இரண்டு நண்பர்கள், மரணத்துக்குப் பின்னர் வானுலகில் சந்தித்தார்கள். "பூமியில் நாம் இருந்தபோது, அத்தனை அன்னியோன்னியமாக இருந்தோம். இனி மறுபடியும் நாம் பிறப்பு எடுப்பதாக இருந்தால், பிரம்மாவிடம் ஒரு வரம் கேட்கவேண்டும். அதாவது ஈருடல் ஓருயிராக இருந்த நாம், இனி மறுபிறப்பிலே ஓருடல் ஓருயிராகவே பிறக்க வேண்டும். இருவரும் ஒன்றாகி ஒருவராக ஒரே மனிதராகப் பிறக்க வேண்டும்." இப்படி ஆசைப்பட்டு அந்த இரண்டு நண்பர்களும் பிரம்மாவிடம் வரம் கேட்டார்கள். அந்த இரண்டு நண்பர்களும் யார் என்கிறீர்கள்! கவிச் சக்கரவர்த்தி கம்பரும், அவருடைய ஆருயிர் வள்ளல் சடையப்பரும்தான்.

கம்பரும் வெண்ணெய் நல்லூர்
வள்ளலும் கலந்து பேசி
இம்பரில் பிறப்பராகில்
இருவரும் ஒருவராக
உம்பரின் தேவ தேவை
ஒருவரம் உவந்து கேட்க

அந்த இணை பிரியாத நண்பர்கள் இருவரும் பிரம்மாவிடம் போய் இப்படி ஒரு வரத்தைக் கேட்கவும், பிரம்மா என்ன செய்தார்!

"செம்மலர் பூத்தோன் செய்தான்
சிதம்பர நாத மாலை"

பிரம்மன் சடையப்ப வள்ளலும் கம்பரும் கேட்ட வரத்துக்கு உடன்பட்டு, அதன்படியே சிதம்பரநாதரைச் சிருஷ்டித்தான்!

இது ரசிகமணி டி. கே. சி அவர்களைப் பற்றிக் காலஞ் சென்ற ஆவுடையப்ப பிள்ளையவர்கள் பாடிய பாடல்.

டி. கே. சி. அவர்களை நன்கு தெரிந்தவர்கள் அனைவரும், அவருடைய இதயத்தில் வள்ளல் தன்மையும் கவித்துவமும் எப்படி ஒருங்கே இணைந்திருந்தன என்பதை நன்கு அறிவார்கள். சடையப்பரும் கம்பரும் ஒன்று சேர்ந்து ஒரே மனிதராகப் பிறந்தார்களோ என்று சொல்லும்படியாக விளங்கினார் டி. கே. சி! இதுவே தமிழ் முனிவர் திருவிழாவில் தலைவரின் முன்னுரைக்கு விஷயமாக விளங்கியது.

சென்ற மார்ச் 18-ம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று திருக்குற்றாலத்தில் டி. கே. சி. நினைவுக் கழகத்தார் திருக்குற்றால முனிவரின் திருவிழாவை, ஆசிரியர் சோமு அவர்களின் தலைமையிலே மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். தலைவர் ராஜாஜியின் ஆசியும் தருமபுர மகா சந்நிதானம், குன்றக்குடி அடிகளார், மதுரை ஆதீனம், செங்கோல் மடாதிபதி முதலியோரின் வாழ்த்துக்களும், தமிழ்நாட்டின் பலபல பகுதிகளிலிருந்து இலக்கிய அன்பர்களும் பிரமுகர்களும் அனுப்பிய பாராட்டுகளும் அன்றைய விழாவுக்கு அணிசெய்தன. ஏ.வி.பால் நாடார் அவர்கள் டி.கே.சி.யின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசினர். இதையடுத்து, பேராசிரியர் அருணாசலக் கவுண்டர் அவர்கள், வீர சிவசுப்பிரமணியம் அவர்கள், ல. சண்முக சுந்தரம் அவர்கள், லட்சுமணப் பெருமாள் அவர்கள், பி. எஸ். சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், ராமய்யங்கார் அவர்கள், சேது ரகுநாதன் அவர்கள், எஸ். மகராஜன் அவர்கள் ஆகிய எட்டு அறிஞர்களும் டி. கே. சி. என்ற அந்தத் தத்துவத்தைப் பல நோக்குகளிலே நின்று கண்டு, விளக்கம் செய்தார்கள். பேசிய ஒவ்வொருவரும் சன்னதம் வந்து பேசினார்கள் என்று சொன்னால் புகழ்ச்சியே யில்லை. டி.கே.சி.யினுடைய உள்ளத்தின் பரிசுத்தத்துக்கும், அவர்களுடைய கலையின் ஆற்றலுக்கும் ஒரு நிதர்சனமான சான்றாக விளங்கியது அந்த விழா. மாலை நாலே கால் மணிக்குத் தொடங்கிய பேச்சுக்கள் இரவு பதினொன்றரை மணி வரை நடைபெற்றன. இந்த ஏழு மணி நேரமும், இருந்த இடத்தைவிட்டு அசையாமல் அத்தனை மக்களும் அப்படியே மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள் என்றால், இந்த அதிசயத்துக்குக் காரணமான அந்தத் தமிழ் முனிவரின் ஆற்றலையும் அருளையும், பேச்சுகளின் தரத்தையும், ரசிகர்களின் ஈடுபாட்டையும் எப்படிச் சொல்வது!

சொற்பொழிவுகளுக்குப் பின் இரவு பன்னிரண்டரை மணியிலிருந்து மூன்றரை மணி வரை சாத்தூர் பிச்சைக் குட்டி கோஷ்டியார் சீதா கல்யாணம் வில்லுப் பாட்டு நடத்தினார்கள். டி. கே. சி.யின் நினைவிலே பிறந்த இந்த நிகழ்ச்சியும் இலக்கிய அந்தஸ்தோடும், நாட்டுப்புறப் பாடல்களுக்கு உள்ள தனியான அற்புத எழிலோடும் அமைந்து, சுமார் மூன்று மணி நேரம் சபையோரை மெய் சிலிர்க்கச் செய்தது.

திருக்குற்றால முனிவரின் நினைவு விழா எல்லா வகையிலும் ஒரு பெருந் திருவிழாவாக நடந்தேறியது. ஆனாலும் வெறும் கொண்டாட்டத்தோடு மட்டும் நின்றுவிடக்கூடாது என்று இந்த மகாநாட்டில் ராஜாஜி அவர்களின் விருப்பம் ஒன்று ஒரு தீர்மானமாக நிறைவேற்றப் பட்டது. அதாவது டி. கே. சி. வாழ்ந்து வந்த இரண்டு வீடுகளையும் டி. கே. சி.

நினைவு மண்டபமாக நிறுவி, டி. கே. சி. செய்து வந்த இலக்கியத் தொண்டு தொடர்ந்து நடத்துவதற்கான திட்டங்களை வகுக்க வேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். இது விஷயமாக உடனே நடவடிக்கைகள் எடுக்கத் திரு ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளையவர்களைச் செயலாளராகக் கொண்ட ஒரு சபையும் நியமிக்கப்பட்டிருக்கிறது.

பெரியார்களின் ஆசியினாலும், தமிழ் அன்பர்களின் ஒத்துழைப்பினாலும் இந்தத் தீர்மானம் நடைமுறையில் நிறைவேறித் திருக்குற்றாலத்தில் டி.கே.சி. நினைவு மண்டபம் ஒரு கலைக் கோயிலாக நின்று நிலவ வேண்டும் என்று பெரிதும் விரும்புகிறோம். மார்ச் பதினெட்டாம் தேதி நடந்த அந்த விழாவின் கோலாகலமான வெற்றியே இந்த விருப்பம் நிறைவேறுவதற்கு ஒரு நல்ல அறிகுறி என்று கருதுகிறோம்.

இந்தத் தமிழ் முனிவரின் திருவிழா நிகழ்ச்சிகளின் காட்சிகளும் குறிப்பும் அடுத்த "கல்கி" இதழில் வெளியாகும்.

# நேருஜிக்கு அமெரிக்காவின் அழைப்பு

சென்ற சில தினங்களாக இந்திய எல்லையில் பாகிஸ்தான் போலீசாரின் அட்டகாசங்கள் அதிகரித்து வருகின்றன. சென்ற வாரம் அமிருதசரசுக்கு அருகில் பல இடங்களில் பல மணி நேரம் பாகிஸ்தான் போலீசாரின் தாக்குதலை இந்தியப் போலீஸ் படைகள் சமாளிக்க வேண்டியிருந்தது. பாகிஸ்தான் போலீசுக்கு உதவியாகப் பாகிஸ்தான் துருப்புகளும் போரில் ஈடுபட்டன. யந்திர பீரங்கிகளும் பெரிய ரகத் துப்பாக்கிகளும் தாராளமாக உபயோகிக்கப்பட்டன. அவ்விதம் சுமார் இருபத்து நாலு மணி நேரம் போர் நடந்ததெனில் அதன் உக்ரத்தை உணரலாம்.

எப்போதாவது அபூர்வமாக எல்லைச்சண்டை ஏற்பட்டால், அதைக் குறித்துக் கலக்கமடையக் காரணமில்லை. ஆனால், சமீப காலமாக இத்தகைய சண்டைகள் அடிக்கடி நிகழ்வது ஜவாஹர்லால் நேருஜிக்கே கவலையை உண்டாக்கி யிருக்கிறது. அமெரிக்க உதவியின் விளைவாகப் பாகிஸ்தானின் ஆயுத பலம் பெருகி வருவதைக் குறித்து நேருஜி தமது கவலையைத் தெரிவித்துள்ளார். பாகிஸ்தானின் ஆயுத பலம் பெருகி வருவதால்தான் பாகிஸ்தான் இந்திய எல்லையில் அடிக்கடி பலப் பரீட்சையில் ஈடுபடத் துணிந்திருக்கிறது போலும்!

* * *

இச் சந்தர்ப்பத்தில், புது டில்லிக்கு அமெரிக்க உள்நாட்டு மந்திரி ஸ்ரீ டல்லஸ் வந்திருந்தபோது, அமெரிக்காவுக்கு விஜயம் செய்யும்படி நமது பிரதம மந்திரி நேருஜியை அழைத்ததும், நேருஜி அந்த அழைப்பை அங்கீகரித்திருப்பதும் முக்கிய விஷயமாகும்.

அமெரிக்க ஜனாதிபதி ஜெனரல் ஐஸன்ஹோவரின் கட்டளைக்கு இணங்கவே நேருஜியை அழைத்திருக்கிறார் டல்லஸ்.

கோவா விஷயமாகச் சமீபத்தில் ஸ்ரீ டல்லஸ் விடுத்த அறிக்கை உலகமெங்கும் எதிர்ப்பையும் கண்டனத்தையும் உண்டாக்கி விட்டது. அவ்விஷயமாக டல்லஸின் கூற்று ருஷ்யாவுக்கு மிகவும் சாதகமாகி விட்டது என்று அமெரிக்க, பிரிட்டிஷ் பத்திரிகைகளே பகிரங்கமாகத் தாக்க ஆரம்பித்து விட்டன.

எனவே, இந்த நிலைமையில் இந்தியாவின் நட்பை இழந்து விடாமல் இருப்பதற்காக ஜெனரல் ஐஸன்ஹோவர் நேருஜிக்கு அழைப்பு அனுப்பியிருக்கலாம்.

ஆறு ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவுக்குச் சென்றிருந்த நேருஜி மீண்டும் அமெரிக்காவின் அழைப்பை அங்கீகரித்தது குறிப்பிடத்தக்கது.

ஜவாஹர்லால்ஜி அமெரிக்காவுக்குச் சென்று, கோவா சம்பந்தமாக அமெரிக்காவின் ஆட்சேபகரமான போக்கையும், பாகிஸ்தானுக்கு அமெரிக்கா போர்த் தளவாடங்கள் அனுப்பி வருவதன் விளைவாக ஏற்பட்டுள்ள விபரீதத்தையும் சுட்டிக் காட்டுவார். அதன் பலனாக, பல அரசியல் பிரச்னைகளை யொட்டியும் அமெரிக்காவுக்கும் பாரத நாட்டுக்கும் ஏற்பட்டுள்ள தப்பெண்ணமும் அபிப்பிராய பேதமும் தீர வழி பிறக்கலாம்.

எனினும், அதற்குள் கோவாப் பிரச்னையும் இந்திய எல்லையில் பாகிஸ்தானின் விஷமமும் முற்றிப் பெரும் நெருக்கடி ஏற்பட்டு விடாமல் இருக்க வேண்டும் என்பதே பாரத மக்களின் பிரார்த்தனையாக இருந்து வரும்.

அட்டைப் படம்

## காஷ்மீரக் காட்சி

இந்த வாரத்துக் "கல்கி" அட்டைப் படத்தைப் பாருங்கள். அதைப் பார்க்கும் போதே 'ஜில், ஜில்' என்று குளிர்ந்த காற்று வீசுவது போன்ற உணர்ச்சி ஏற்படும். மனத்தில் இனம் தெரியாத ஒரு அமைதி நிலவும். நாம் புராணங்களில் கண்ட சொர்க்க பூமியின் வர்ணிக்க முடியாத காட்சி திடுதிப்பென்று கண் முன்னே உயிர் பெற்று எழுந்தது போலிருக்கும். ஆம்; காஷ்மீரம் இப்படித்தான் காட்சி யளிக்கிறது. அதன் ஈடு இணையற்ற அற்புத எழிலைத்தான் நமது ஓவியர் மணியம் வண்ணச் சித்திரமாக வரைந்திருக்கிறார்.

அஜந்தாவின் இருண்ட குகைகளில் உள்ள அழகிகளின் ஓவியங்கள் காஷ்மீரத்தில் பளிச்சென்று சூரிய ஒளியில் உலவுவதைப் பார்க்கலாம். கையில் தாமரை மலர்களைப் பிடித்துக் கொண்டு தால் தடாகத்தின் கரையிலே அப்படிப்பட்ட பெண்மணிகள் நிற்பதைக் காணலாம். அஜந்தாச் சித்திரங்களில் காணப்படும் அலங்காரங்களைப் போலவே காஷ்மீரத்து மங்கைகள் ஆடை அணிகள் பூண்டிருக்கின்றனர். இந்த நாட்டின் இயற்கை எழிலையும் இமயமலைக் காட்சிகளையும் தால் தடாகத்தின் படகு வீடுகளில் மக்கள் உல்லாசமாக இருக்கும் அதிசயத்தையும் அடுத்து வரும் 'வட இந்திய யாத்திரை'க் கட்டுரைகளில் காணலாம்.

# என்ன சேதி?

## பாலாறும் தகராறும்

"காவிரி தென் பெண்ணை பாலாறு" என்று பாரதியாரால் பாடப் பெற்ற பிரசித்த நதிகளில் ஒன்ருன பாலாறு கடந்த நாற்பது வருஷ காலமாக வெறும் பாலைவன ஆருக இருந்து வருகிறது. இதன் காரணமாக, பாலாறு பாயும் முக்கிய பிரதேசங்களான வட ஆற்காடு செங்கல்பட்டு ஆகிய இரு மாவட்டங்களும் தமிழ் நாட்டின் 'ராயல சீமை' என்ற பெயரையும் பெற்றிருக்கின்றன.

பாலாற்றுப் படுகையில் இவ்விரு மாவட்டங்களையும் சேர்ந்த 86,000 ஏக்கர் நிலங்கள், போதிய நீர்ப்பாசன வசதி இன்றி, உற்பத்திக்கு உதவாத தரிசு நிலங்களாய்க் கிடக்கின்றன. காரணம், பாலாற்றில் நீர் இல்லை என்பதல்ல.

பாலாற்றின் தலைப்பகுதியில் மைசூர் ராஜ்யம் இருக்கிறது. பாலாற்றுத் தண்ணீர் முழுவதையும் மைசூர் அரசாங்கமே குடித்து விட்டு ஒரு பொட்டுத் தண்ணீரைக் கூட இப்பால் விடுவதில்லை. இதை விடப் பெரிய அநியாயம் வேறு இருக்க முடியாதல்லவா? ஒரு இடத்தில் உற்பத்தியாகி வரும் நதியின் தண்ணீரை முதல் பகுதியிலுள்ளவர்களே உறிஞ்சி உபயோகித்துக் கொண்டு பிற்பகுதியிலுள்ளவர்களுக்கு வெறும் மணலை அனுப்பி வைப்பது பெரும் அநீதியாகும். சுதந்திர நாட்டின் அரசியல் நிர்ணய விதிகளுக்கே ஒவ்வாத காரியம்.

இந்த அநியாயத்துக்குப் பரிகாரம் தேடும் முயற்சியில் வட ஆற்காடு செங்கல்பட்டு விவசாயிகள் பகீரதப் பிரயத்தனம் எடுத்துக் கொண்டு மகாநாட்டுக்கு மேல் மகாநாடாக நடத்தி வருகிருர்கள். மத்திய சர்க்காருக்கு விஷயத்தை விளக்கி நியாயம் கோரியதின் பலனாக, மத்திய சர்க்கார் ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

சென்னை சர்க்காரின் பிரதம என்ஜினீயர்களும், மைசூர் சர்க்காரின் பிரதம என்ஜினீயர்களும், மத்திய சர்க்கார் பிரதிநிதியுடன் கூடி இந்தத் தகராறைத் தீர்த்து வைக்க வேண்டுமென்பதுதான் அந்த முடிவு. ஆயினும் மைசூர் சர்க்காரின் பிடிவாதம், பேராசை காரணமாக இந்தக் காரியம் வெகு காலமாக இழுத்துப் பறித்துக் கொண்டு நிற்கிறது.

விஷயம் இதுதான்:

பாலாற்று நீரில் மைசூர் சர்க்காருக்கு உள்ள பங்கைப் போலவே சென்னை சர்க்காருக்கும் பங்குண்டு. இது விஷயமாக 1902-ம் ஆண்டில், பிரிட்டிஷ் சர்க்கார் காலத்தில், மைசூருக்கும் சென்னைக்குமிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. அந்த ஒப்பந்தப்படி மைசூர் சர்க்கார் இவ்வளவு ஜலம்தான் உபயோகிக்கலாம், சமுத்திரம் போன்ற பெத்த மங்கலம் ராம சாகரம் ஏரிகளில் இவ்வளவு ஜலம்தான் நிரப்பிக் கொள்ளலாம் என்று கணக்கு இருக்கிறது. ஏரிகளின் ஆழத்தையும் அகலத்தையும் உயரத்தையும் கூடக் கணக்கிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆயினும் மைசூர் அரசாங்கம் கணக்குகளைத் தூக்கிப் பாலாற்றில் போட்டு விட்டுத் தங்கள் இஷ்டம்போல் ஏரிகளின் கரையை உயர்த்தியும், அகலமாக்கியும் ஆழமாக்கியும் தண்ணீரைத் தேக்கிக்கொண்டிருக்கிருர்கள். இது தவிர பாலாற்று ஜலத்தைக் கோலார் தங்க வயல் பிரதேசப் பாசனத்துக்கும், குடி தண்ணீர் விநியோகத்துக்கும் பயன்படுத்தி வருகிருர்கள்.

அந்தக் காலத்தில் கோலார் தங்க வயலின் நிர்வாகம் பிரிட்டிஷ் கம்பெனியாரிடம் இருந்ததால் அப்போதைய பிரிட்டிஷ் சர்க்கார் பாலாற்றுத் தண்ணீர் கோலாருக்குக் கிடைப்பதில் அதிக அக்கறையுடன் ஒருதலைப் பட்சமான ஒப்பந்தம் செய்திருந்தனர். இதில் வியப்பொன்றுமில்லை.

இந்த அநீதி இன்னும் நீடிக்கக் கூடாது என்பதே மேற்கண்ட இரு மாவட்டங்களின் கோரிக்கையாகும். சமீபத்தில் வாணியம்பாடியில் திரு ஏ. எஸ். ஐயங்காரின் தலைமையில் மந்திரி மாணிக்கவேலு நாயகர் முன்னிலையில் ஒரு மகாநாடும் நடத்தி இருக்கிருர்கள்.

பல்லவர் ஆட்சிக் காலத்தில் பாலாற்றின் இரு கரையும் எப்போதும் வெள்ளம் புரண்டு, ஓடியதாகச் சரித்திரம் கூறுகிறது. அத்தகைய குதூகலக் காட்சியை மீண்டும் காண ஆசைப்படுகிருேம்.

## வேலூர் சிறையில்

மகான்களின் பிறந்த தினத்தைக் கொண்டாடுவதும், அவர்களுடைய சரித்திரங்களைப் படிப்பதும், செயல்களைப் போற்றுவதும், ஞாபகச் சின்னங்கள் அமைப்பதும் அவர்களுக்கு நாம் அளிக்கும் கௌரவம் மட்டும் அல்ல, நம்மை நாமே

கௌரவப்படுத்திக் கொள்வதுடன் நல்ல பாதையையும் வகுத்துக் கொள்வதாகும்.

மார்ச் பதினெட்டாந் தேதி வேலூர் மத்திய சிறைச்சாலையில் இத்தகைய ஒரு புனிதமான காரியம் நடந்திருப்பது அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம்.

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் மேற்படி சிறைச்சாலையில் நமது தலைவர் ராஜாஜி சிறை வாசம் செய்தார். பாரத நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் காந்தி மகாத்மாவின் உற்ற துணைவர்களாயிருந்த தலைவர்கள் அனைவரும் அப்போது சிறை செல்ல நேர்ந்தது.

தமிழகத்தின் தனிப்பெரும் தலைவரான ராஜாஜி வேலூர் சிறைக்குச் செல்ல நேரிட்டது. சரித்திர முக்கியத்துவம் பெற்ற இந்தச் சிறைச்சாலையில் ராஜாஜி தங்கியிருந்த புனிதம் பெற்ற அறையில் கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் ஒரு நினைவுச் சின்னம் நிறுவி ராஜாஜியின் சேவைகளையும், அறிவாற்றலையும் வியந்து பேசியிருக்கிறார்.

இந்தப் புனிதமான நினைவுச் சின்னத் திறப்பு விழாவில் நமது நிதிமந்திரி திரு சுப்பிரமணியம் அவர்களும் கலந்து கொண்டார். ராஜாஜியும் பிரசன்னமாகியிருந்தார்.

## வாழ்க நகரசபை!

மத்திய சர்க்காரும், மாகாண சர்க்கார்களும் பற்றுக்குறை பட்ஜெட்டைச் சமர்ப்பித்திருக்கும் இந்தச் சமயத்தில் சென்னை நகர சபையும் 1956—57-ம் வருஷ பட்ஜெட்டைச் சமர்ப்பித்திருக்கிறது. நகரசபையின் வரவு செலவுக் கணக்கைப் பார்க்கும்போது ஒரு லட்சத்துப் பதினோராயிரம் ரூபாய் உபரியாக இருக்கிறது. இந்த பட்ஜெட்டைத் தயாரித்த நகர சபையின் நிதி நிரந்தரக் கமிட்டியின் தலைவர் திரு ராதாகிருஷ்ணப் பிள்ளை 'கடன் பட்டுக் காலையில் எழுந்திருப்பதை விடப் பட்டினியாகப் படுக்கச் செல்வதே மேல்' என்ற கருத்துடன் இந்தப் பட்ஜெட்டைத் தயாரித்ததாகக் கூறியிருக்கிறார்.

நகரசபை நிதிக் கமிட்டித் தலைவரை வாழ்த்துகிறோம். திரு ராதாகிருஷ்ணப் பிள்ளை நகரசபை நிர்வாகத்தில் நீண்ட கால அனுபவம் பெற்றவர். மிக்க திறமைசாலி. ஏற்கனவே மேயர் பதவியைப் புகழுடன் வகித்தவர். நகரசபை நிர்வாகத்திலுள்ள ஊழல்களையும், குறைபாடுகளையும் நன்கறிந்தவர். பொது மக்களின் குறைபாடுகளை, ஏழை மக்களின் தேவைகளைப் பரிபூரணமாக உணர்ந்தவர்.



மார்ச்சு 14-ம் தேதி சென்னை கிண்டி கவர்னர் மாளிகைக்கு அடுத்துள்ள காந்தி மண்டபத்தில் பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் பிறந்த நாள் விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. சுவாமி பரமாத்மானந்தா, ஸ்ரீ செல்லம் ஐயர், ஸ்ரீ 'அண்ணு' சுப்பிரமணிய ஐயர் ஆகியோரும், சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். ராஜாஜியும், மற்றும் பல பிரமுகர்களும் கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். அன்று நடைபெற்ற கூட்டுப் பிரார்த்தனையில் ஏராளமான மக்கள் கலந்து கொண்டனர்.

இவர் நகரசபையின் நிர்வாகம் திறம்பட இயங்குவதற்கான சில மேலான யோசனைகளை வெளியிட்டிருக்கிறார். இவை காரியாம்சத்தில் நிறைவேற்றப்படுமானால் சென்னை நகர மக்கள் பலருடைய குறைகள் நீங்குவதற்கு வழி ஏற்படும்.

தவிர, இவ் வருஷத்திய நகர சபை பட்ஜெட்டின்போது வெளியான ஒரு முக்கிய தகவல் சென்னை நகர மக்களின் பெரும் பாராட்டுதலுக்குரிய விஷயமாகும். அது சைக்கிள் வரியை ரத்து செய்து விடுவதென முடிவு செய்திருப்பதுதான்.

சென்னை நகரத்திலுள்ள பெரும்பான்மையான ஏழை மக்களும், நடுத்தர வகுப்பினருமே சைக்கிள் சாரத்தியம் செய்பவர்கள். இங்கும் அங்கும் ஓடி ஆடி உழைக்கும் பாட்டாளிகளும் பஸ்ஸுக்குப் பணம் கொடுக்க இயலாத ஏழைக் குமாஸ்தாக்களுமே சைக்கிளைப் பிரதானமாக நம்பியிருப்பவர்கள். சைக்கிள் வரியை ரத்து செய்த நகரசபையை இவர்களுடைய சார்பாகப் பாராட்டுகிறோம்.

## விநோபாஜி வருகிறார்

பூதான இயக்கத்தின் பிதாவான ஆசார்ய விநோபாஜி வரும் மே மாதம் இரண்டாவது வாரத்தில் சென்னைக்கு விஜயம் செய்யப் போகிறார்.

விநோபாஜியை மிகச் சிறப்பான முறையில், விருந்தினரை உபசரிப்பதில் புகழ் பெற்ற தமிழகத்தின் பண்புக்குப் பெருமை தரும் முறையில், வரவேற்பதற்கு வேண்டிய முயற்சிகளும் ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன.

வரவேற்பு உபசரணைக் கமிட்டியார் இதற்காக நமது முதன் மந்திரி காமராஜ் அவர்களின் தலைமையில் ஒரு மகாநாட்டையேகூட்டி ஆலோசனை நடத்தியிருக்கிறார்கள்.

ஸ்ரீ விநோபாஜியின் தமிழக யாத்திரை வெற்றிகரமாக நடப்பதற்குரிய யோசனைகளை முதலமைச்சர் மகாநாட்டில் கூறியுள்ளார்.

பூதான இயக்கத்தின் புனித நோக்கம் அரசியலுக்கு அப்பாற்பட்டது. சோஷலிஸ சமுதாய அமைப்பு லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டது. இந்த உயர்ந்த நோக்கத்தைக் கிராம மக்களும், நிலம் படைத்தவர்களும் உணர வேண்டும். இதற்குத் தன்னலமற்ற பிரசாரகர்களின் சேவையும் சலியாத உழைப்பும் மிகமிக அவசியம். பிரசாரத்தின் பயனாகவே இந்த இயக்கம் வெற்றிபெற வேண்டும்.

தமிழகத்தில் பூதான இயக்கம் மகத்தான வெற்றி பெறுவது, பிரசாரகர்களின் சிரமதானத்தைப் பொறுத்திருக்கிறது.

## தமிழ் மண்டபம்

தமிழ் கூறும் நல்லுலகிலேயே பம்பாய்த் தமிழ் சங்கம் ஒரு மகத்தான ஸ்தானம் வகிக்கிறது. ஆயினும் இந்தத் தமிழ்ச் சங்கத்துக்கு நல்ல முறையில் அமைந்த தமிழ் மண்டபம் இதுவரை இல்லை. ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் ஓரிடத்தில் கூடித் தமிழ் இசையையோ, தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளையோ கேட்டு அனுபவிக்கும்படியான விசாலமான தமிழ் மண்டபம் பம்பாய் நகரில் இல்லை.

இந்தக் குறையை இப்பொழுது நிவர்த்தி செய்து விட்டது பம்பாய்த் தமிழ்ச் சங்கம். முதல்தரமான தமிழ் மண்டபம் ஒன்றைக் கட்டிவிட்டது. தமிழ்ச் சங்க நிர்வாகிகள் ஆழ்ந்த தமிழ்ப்பற்று உள்ளவர்கள், அபூர்வமான திறமை பெற்றவர்கள், எடுத்த காரியத்தைச் சாதிக்கும் தீரர்கள். அவர்கள் பம்பாய் நகரில் தமிழ் மண்டபம் கட்டி

முடித்து விட்டதில் வியப்பொன்றுமில்லை. இந்த மாபெரும் தமிழ் மண்டபம் கட்டி முடிவதற்குச் சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் துண்டு விழுந்திருக்கிறது. இந்தத் தொகையைப் பூர்த்தி செய்வதற்காகப் பம்பாய்த் தமிழ்ச் சங்க நிர்வாகிகள் ஏப்ரல் 15உ ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லக்ஷ்மி அவர்களின் கச்சேரி நடைபெற ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பம்பாயில் நடைபெறும் இந்தச் சங்கீதக் கச்சேரிக்குப் பம்பாய் நகரிலும் அதைச் சுற்றிலும் உள்ள தமிழர்களும், சங்கீதாபிமானிகளும் திரள் திரளாக விஜயம் செய்து பம்பாய் நகரில் ஒரு நல்ல தமிழ் மண்டபம் அமைக்கும் உத்தம கைங்கரியத்தில் பங்கு பெறுவார்கள் என்று நம்புகிறோம்.

## படகுக்குப் பரிசு

கடந்த ஜனவரி மாதம் 26-ந் தேதியன்று இந்தியக் குடியரசு விழா தினத்தன்று சென்னையில் விதம் விதமான ஊர்வலங்கள் நடைபெற்றதல்லவா? அவற்றில் அலங்காரம் செய்த அழகிய படகு ஊர்வலமும் ஒன்று. இந்த அழகிய படகை ஜோடனை செய்தவர்கள் ஷெல்லிஸ் கம்பெனியார். மேற்படி ஊர்வலக் காட்சிகளில் முதல் பரிசு பெற்ற ஷெல்லிஸ் கம்பெனியாரின் பிரதிநிதி ஸ்ரீ எல். எஸ். கிருஷ்ணமூர்த்தியிடம் முதன் மந்திரி காமராஜ் அவர்கள் அழகிய 'சுழலும் ஷீல்டை'ப் பரிசாக வழங்கினர்.



"இந்த வருஷம் பட்ஜெட்டைப் பார்த்தீர்களா? துண்டு விழுந்திருக்கிறது......"

"உங்கள் துண்டு கீழே விழுந்து விட்டது. முதலில் அதைக் கவனியுங்கள்!"

## பனித்துளி

"நான் விடுதலைப் போருக்குப் பிறகு சிறையிலிருந்து வெளி வந்தது முதல் நாணயத்தையே தொட்டுப் பார்த்ததில்லை."

— விநோபாஜி

அதனால்தான் விநோபாஜியை நாணயமுள்ள மனிதர் என்று அனைவரும் போற்றிப் புகழ்கிறோம்.

★

"தங்களுடைய நீண்ட காலக் கோரிக்கைக்குச் சர்க்கார் எவ்வித பதிலும் கூறாததால் இந்தூரில் ஆயிரம் பள்ளி ஆசிரியர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டனர்."

— செய்தி

இனி, சர்க்கார் தங்கள் மௌன விரதத்தைக் கைவிடுவார்களா?

★

"இந்தியாவை நான் ஒரு நாளும் மறக்க முடியாது. காரணம், எனக்கும் ஸ்ரீமதி மௌண்ட் பாட்டனுக்கும் இந்தியாவில்தான் விவாகம் நிச்சயமாயிற்று." — செய்தி

நாமும் மௌண்ட் பாட்டனை ஒரு நாளும் மறக்க முடியாது. காரணம், இந்தியாவுக்கும்–பிரிட்டனுக்கும் இவர் பதவிக் காலத்தில்தான் விவாகரத்து நிச்சயமாயிற்று

★

"1950–ம் ஆண்டில் பாகிஸ்தானுக்குக் குடியேறிய 6 லட்சம் முஸ்லிம்களில் 5 லட்சம் பேர் மீண்டும் இந்தியாவுக்கே திரும்பி வந்து விட்டனர். சென்ற ஆண்டில் ஒரே ஒரு இந்திய முஸ்லிம்தான் மேற்கு வங்காளத்திலிருந்து பாகிஸ்தானுக்குக் குடியேறியிருக்கிறார்." — செய்தி

அவர் என்ன செய்கிறார் பார்க்கலாம்.

★

"நம் ஆயுளை அதிகரித்துக் கொள்ள நாம் ஒவ்வொருவரும் பாத யாத்திரை செய்வது அவசியம்." — விநோபாஜி



பஸ் ஸ்டாண்டில் நிற்கும் பிரயாணிகளுக்கு இது எங்கே தெரியப் போகிறது?

# தமிழ் கூறும் நல்லுலகம்

தமிழர்கள் ஆயிரம் மைலுக்கு அப்பா லிருந்தாலும் அவர்களுக்குத் தமிழ் மீதுள்ள பக்தியும் ஈடுபாடும் சிறிதும் குறைந்திருக்க வில்லை. டெல்கோ தமிழ்ச் சங்கத்தின் நான்காவது ஆண்டு விழா பெப்ருவரி 18,19 தேதிகளில் வெகு விமரிசையாக நடந்தது. விழாவுக்குக் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங் கத்தின் தலைவர் திரு ஓ. எஸ். வி. மணியன் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார். சனிக்கிழமை இரவு டெல்கோ தமிழ்ச் சங்கத்தார் "புது வாழ்வு" என்ற சமூக நாடகத்தை வெகு அழகாக நடித்தனர். பெப்ருவரி 19-ந் தேதி காலையில் கலைக் கூட் டம் கூடியது. அதில் தலைவர் திரு மணியம் அவர்கள் பங்கு கொண்டு 'சிலம்பு' என்ப தைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர். திரு எஸ். ஒய். சுப்பிரமணிய அய்யர் அவர்கள் சிவபுராணத்திலிருந்து சில பகுதி களையும், திரு ஷண்முகம் அவர்கள் ஒரு தமிழ்ப் பாடலை எடுத்துக் கொண்டு அதில் உள்ள கவி நயத்தையும், திரு கே. எஸ். கோபால கிருஷ்ணன் அவர்கள் 'தொழி லாளர் நிர்வாக'த்தைப் பற்றியும், திரு டி. எஸ். வி. கிருஷ்ணன் அவர்கள் 'காரைக் கால் அம்மையார்' சரித்திரத்தைப் பற்றி யும் பேசினர்கள். மாலையில் டாக்டர் சி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் விழாவுக்கு வந்திருந்து பேசிக் கௌரவித்தார்.



*

பெப்ருவரி மாதம் வந்தால் வங்கத் தமிழர்களுக்குத் தனி உற்சாகம். காரணம், ரஸிக ரஞ்சன சபையார் அம் மாதத்தில் தானே தியாகராஜ உற்சவம் கொண்டாடு கிறார்கள்! இவ்வாண்டு பெப்ருவரி 10-ந் தேதி முதல் 20-ந் தேதி முடிய பதினொரு தினங்கள் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட அலங்காரப் பந்தலில் கொண்டாடப்பட்ட உற்சவம், முந்திய ஆண்டுகளைவிட முக்கி யத்துவம் வாய்ந்தது என்று கூறலாம். ஏனெனில் முதல்தர வித்வான்களில் பலர் இவ் விழாவில் பங்கெடுத்துக் கொண்டனர். மகாராஜபுரம், ஜி. என். பி., மதுரை மணி, ஆலத்தூர் சகோதரர்கள், பாலக்காடு கே. வி. நாராயணஸ்வாமி, பாப்பா, டி. என். கிருஷ்ணன், துவாரம் வேங்கட சாமி நாயுடு, பாலக்காடு மணி, பழனி சுப்புடு, காருகுறிச்சி அருணாசலம் கோஷ்டி யார் (நாகஸ்வரம்). ஸ்ரீமதி ருக்மிணி தேவி; குமாரி நிர்மலா விஸ்வநாதன் (நடனம்) ஆகியோர் பங்கு கொண்டு இசை, நடன விருந்தளித்தனர் என்றால் சொல்ல வேண்டுமா? வங்கத்தின் பிரபல தொழிலதிபர் ஸ்ரீதேவகி நந்தன ஜலான் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு, கலா க்ஷேத்திரம் ஸ்ரீமதி ருக்மணி தேவி கோஷ்டி யாரின் "குமார ஸம்பவம்" நடன நாடகத் துடன் ஆரம்பமாகி, திருப்பாவை கோஷ்டி யாரின் "ஆண்டாள்" நாடகத்துடன் முடி வடைந்தது உற்சவம்.

இவ்வுற்சவத்தைத் தொடர்ந்து, ரஸிக ரஞ்சன சபைக் கட்டட நிதிக்கென இரண்டு நாட்கள் நடைபெற்ற திருவிதாங்கூர் சகோ தரிகளின் நடன நிகழ்ச்சி வட இந்திய சகோதரர்களாலும் பெரிதும் பாராட்டப் பட்டது. இச்சபை-நிர்வாகிகளின் உற்சா கத்தையும், சலியாத உழைப்பையும் காணும்போது, செயலாளர் ஸ்ரீ வி. ஸ்ரீநிவாஸன் அவர்களின் "கங்கை நதி பாயும் வங்கத் தலைநகர் வட திருவையாறாக வேண்டும்" என்ற கனவு நனவாகி விடு மென்று தோன்றுகிறது.

கல்கத்தா அமெச்சூர் நாடக சபையார் கடந்த 26-2-56 அன்று "தனபதி" என்னும் நாடகத்தை மேடை ஏற்றி னார்கள். அண்மையில் நடைபெற விருக்கும் அவர்களின் ஆண்டு விழாவை யொட்டி ஒரு நாடக விழாவையே நடத்தத் திட்ட மிட்டிருக்கிறார்களாம். —'பாதி'




"அழகாக அலங்காரம் செய்து கொள். மாப்பிள்ளை மாதிரி கம்பீரமாக இருக்க வேண்டும். பெண் ரொம்ப நாகரிகம்! உன்னைப் பற்றிப் பெரிதாக நினைக்க வேண்டும்" என்று பெண் பார்க்கப் போகுமுன் கதிரேசனுக்குப் பலவிதமான உபதேசங்களைச் செய்தார் அவன் மாமா.

"உம்" என்றான் கதிரேசன் இலேசாகச் சிரித்துக் கொண்டே.

மத்தியானச் சாப்பாடு முடிந்ததும் கதிரேசனும், அவன் மாமா தம்பதிகளும் அடுத்த தெருவிலிருக்கும் வீட்டுக்குப் பெண் பார்க்கச் சென்றனர். இவ்வளவு நேரமும் அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பெண்ணின் தந்தை, பிரமாதமாக வரவேற்று வீட்டினுள் அழைத்துச் சென்றார்.

வரவேற்பு உபசாரங்கள் எல்லாம் முடிந்த பின் பெண்ணை அழைத்து வருமாறு கட்டளையிட்டார் பெண்ணின் தந்தை.

கதிரேசன் துடித்துக் கொண்டிருந்தான். பெண்ணைப் பற்றி மாமா பெரிதாகக் கூறினாரே, அவ்வளவு அழகாய் இருப்பாளா என்று கற்பனை செய்து கொண்டிருந்தான்.

மணப் பெண்ணுக்குரிய அலங்காரங்களோடு அன்ன நடை போட்டுக் கொண்டு வந்தாள் பெண். அவளைப் பார்த்ததுதான் தாமதம். 'ஷாக்' அடித்து விட்டது கதிரேசனுக்கு. நிமிர்ந்து பார்த்த அவளும் அயர்ந்து போய் விட்டாள். அந்தச் சூழ்நிலையைச் சமாளிப்பதற்குள் ரொம்பவும் சிரமப்பட்டு விட்டாள்.

வீட்டுக்கு வந்ததும், "பெண் எப்படி!" என்று கேட்டார் மாமா. பெண்ணின் அழகைப் பார்த்து அவன் சொக்கிப் போயிருப்பான் என்பது அவரது எண்ணம்.

"எனக்குப் பிடிக்க வில்லை" என்றான் கதிரேசன்.

முகத்தில் அடித்தது போலிருந்தது மாமாவுக்கு. "அடபாவி!" என்று கூவி விட்டார். "பெரிய இடத்துப் பையன்களெல்லாம் இந்தப் பெண்ணுக்காகப் போட்டி போடுகிறார்கள்! நீ என்ன இப்படிச் சொல்கிறாய்!" என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

"என்னவோ எனக்குப் பிடிக்கவில்லை. நான் உடனே பட்டணம் போக வேண்டும்" என்று கூறிவிட்டு, பிரயாணத்துக்குத் தயார் செய்வதில் முனைந்தான்.

இரவு ஏழு மணிக்கு மதுரை ஜங்ஷனிலிருந்து புறப்படும் ஜனதா எக்ஸ்பிரஸ், புறப்படுவதற்கு அறிகுறியாக 'வீ'லென்று அலறியது. ஆம்! அன்று இதே நேரத்தில் தான் 'அந்தப் பெண்' வேகமாக ஓடி வந்தாள்.

ரயில் புறப்பட்டது. ரயிலுடன் அவன் சிந்தனையும் புறப்பட்டு விட்டது, அந்தச் சம்பவங்களை நோக்கி.

மூன்று மாதங்களுக்கு முன் தன் மாமா வீட்டுக்குப் போய் விட்டு, இதே ஜனதா எக்ஸ்பிரசில் சென்னைக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தான் கதிரேசன். ரயில் விசில் கொடுத்து நகர்ந்த சமயம் 'அந்தப் பெண்' அதி வேகமாக ஓடி வந்து ஏறினாள். அந்தப் பெட்டியில் ஒன்றிரண்டு பேர்கள்தான் இருந்தனர். கதிரேசன் இருந்த பகுதியில் அவன் மட்டும் தனியாக இருந்தான்.

அவள் கதிரேசனுக்கு எதிரிலுள்ள பெஞ்சியில் அமர்ந்தாள். "நல்லவேளை, ரயில் கிடைத்தது!" என்று தனக்குள் கூறிக்கொண்டாள்.

ரயில் அதிவேகமாக ஓடிக் கொண்டிருந்தது. கதிரேசன் சற்று நேரம் அவளைப் பார்த்தான். அவள் மிகுந்த அழகு படைத்திருந்தாள். 'தன்னைத் தனியாக இவள் எங்கே போகிறாள்' என்று அறிய அவனுக்கு ஆவல். திடீரென்று ஒரு பெண்ணிடம் எப்படிப் பேச முடியும்!

கொடைக்கானல் ரோடு வருகிற வரையில் அவர்களை மௌனம் ஆட்கொண்டிருந்தது. பிறகு தான் பேசக்கூடிய சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைத்தது. இரவுக்குத் தேவையான ஆகாரங்களை அவன் அங்கேயே வாங்கிக் கொண்டான். ஆனால் அவள் எதிலும் பற்றில்லாமல் இருப்பதைப் பார்த்தவுடன் அவனால் பேசாமல் இருக்க முடியவில்லை.

"நீங்கள் ஏதாவது ஆகாரம் வாங்கிக் கொள்ள வில்லையா!" என்று அவளை நோக்கிக் கேட்டான் அவன்.

பித்துப் பிடித்தது போலிருந்த அவள், அப்பொழுதுதான் தன் உணர்வுக்கு வந்தாள். "ஆமாம் வாங்கணும்" என்றாள்.

கதிரேசன் எழுந்து ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தான். உணவுப் பொட்டலங்களை விற்பவர்கள் அந்தப் பக்கமே தலை காட்டவில்லை. இதற்குள் ரயிலும் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டு விட்டது.

"பரவாயில்லை, நீங்கள் சிரமப்பட வேண்டாம்" என்றாள் அவள்.




"சரி, இதைச் சாப்பிடுங்கள்" என்று கூறித் தான் வாங்கிய இரண்டு பொட்டலங்களில் ஒன்றை அவளிடம் நீட்டினான்.

"வேண்டாம். நீங்கள் சாப்பிடுங்கள். எனக்குப் பசி இல்லை" என்றாள் அவள்.

"இப்பொழுதுதான் உணவு வாங்கச் சொன்னீர்கள்! பசி இல்லை என்றால் நம்ப முடியுமா!" என்று கூறி மீண்டும் நீட்டினான்.

வேறு வழியின்றி அவள் அதை வாங்கிக் கொண்டாள்.

சாப்பிட்டானதும் "உங்கள் பெயர் என்ன!" என்று கேட்டான் கதிரேசன்.

"சந்திரா" என்றாள்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்!"

"சென்னைக்கு!"

"தனியாகப் பிரயாணம் செய்கிறீர்களே, துணைக்கு யாரையாவது நீங்கள் அழைத்து வரக் கூடாது!"

இதைக் கேட்டதும் அவள் கண்களிலிருந்து நீர் பொங்கி விட்டது. அவள் விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள்.

கதிரேசன் பதறிப் போய் விட்டான். "நான் தவறாகக் கேட்டு விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்" என்றான்.

அவள் கண்களைத் துடைத்து விட்டு, "தாங்கள் கேட்டதில் தவறொன்றுமில்லை. என் நிலைமையை எண்ணியபோதுதான் எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது. நான் வந்தது என் வீட்டில் ஒருவருக்கும் தெரியாது" என்றாள்.

"சொல்லிக் கொள்ளாமல் வந்து விட்டீர்களா! காரணம் என்ன!"

"என் அப்பா அம்மா என்னை ரொம்பச் செல்வமாக வளர்த்தார்கள். நன்றாகப் படிக்க வைத்தார்கள். ஆனால் எனக்குக் கொஞ்சமும் தகுதி இல்லாத ஒருவனுக்கு, ஒரு குடிகாரனுக்கு என்னைப் பலியிடப் போகிறார்கள்......"

"அதற்காக இப்படி வந்து விடுவதா! தாய் தந்தையரிடம் ஆட்சேபிக்கிறதுதானே!"

"நான் எவ்வளவோ வாதாடினேன். அந்தக் குடிகாரனுக்கு நான் முறைப் பெண்ணாம். முன்பே என்னை அவனுக்குக் கொடுக்கிறதாகத் தீர்மானித்து விட்டார்களாம். தவிர திருச்சியில் அவன் கொஞ்சம் பணம் படைத்தவன். எவ்வளவுதான் பணமிருந்தாலும், குடிகாரனுக்கும், பெண் பித்தனுக்கும், கல்வி வாசனை யற்றவனுக்கும் வாழ்க்கைப்பட எந்தப் பெண்ணும் மனம் ஒப்புவாளா! என்னை வற்புறுத்தி நாளை நிச்சயதார்த்தம் செய்ய ஏற்பாடுகள் செய்து விட்டார்கள்."

அவள் கண்ணீருடன் கூறியதைக் கேட்டு மிகவும் அனுதாபப் பட்டான் கதிரேசன்.

"தாங்கள் எங்கே போகிறீர்கள்!" என்று கதிரேசனை நோக்கிக் கேட்டாள் சந்திரா.

"நானும் சென்னைக்குத்தான்."

"அப்படியானால் எனக்கு ரொம்பவும் துணையாகி விட்டது. சென்னையில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்?"

"ஒரு பெரிய கம்பெனியில் உத்தியோகம். இருநூறு ரூபாய் சம்பளம்."

"சென்னையில் எனக்கு ஏதாவது வேலை வாங்கித் தர முடியுமா?"

"முடிந்தால் பார்க்கிறேன்!"

இருவரும் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தனர். அவளிடம் உரையாடிக் கொண்டிருப்பதில் கதிரேசன் உள்ளத்தில் ஒரு வகை பூரிப்பு நிறைந்திருந்தது. சந்திராவின் குலம், கோத்திரம் அனைத்தும் அவனையே சார்ந்திருந்ததால் அவள்மீது உரிமைகூட அவனுக்கு ஏற்பட்டு விட்டது. இவ்வளவு நேரமும் துக்கத்தால் குவிந்திருந்த அவள் முகம் இப்பொழுது பூரணமாக மலர்ந்து விட்டது. சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டே அவள் இருந்தாள்.

சற்று நேரத்தில் கதிரேசன் கண்களை இறுக்கியது. "உங்களுக்குத் தூக்கம் வரவில்லையா!" என்று கேட்டான்.

"எனக்கெங்கே தூக்கம் வரும்! உங்களுக்குத் தூக்கம் வந்து விட்டதா!"

"ஆமாம்!" என்றான் அவன்.

"இவ்வளவு நேரமும் உங்களுடன் பேசிக் கொண்டிருந்ததில் என் வேதனையை மறந்திருந்தேன். தூக்கம் வருகிறதென்றால் படுத்துக் கொள்ளுங்கள்" என்றாள்.

கதிரேசன் படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டான். அசதியாக இருந்ததால் நன்றாகத் தூங்கி விட்டான். அவன் உள்ளம் கந்தர்வமயமான ஓர் உலகத்துக்குச் சென்று விட்டது. சந்திரா கதிரேசனுடன் தங்கி யிருப்பது போலவும், இருவரும் இணையற்ற காதலர்களாகத் திகழ்வது போலவும் இன்பமான கனவு தோன்றியது.

அவன் விழித்த பொழுது திருச்சி ஸ்டேஷனை விட்டு ரயில் புறப்பட்டுக் கொண்டிருந்தது. கண்களைத் துடைத்து விட்டு எதிரே பார்த்தான். சந்திரா இருந்த இடம் காலியாக இருந்தது. 'எங்கே போயிருப்பாள்!' என்று சிந்தித்தவாறு துண்டை எடுப்பதற்காகப் பெட்டியைப் பார்த்தான். பாம்பை மிதித்து விட்டவன் போல் திடுக்கிட்டு விட்டான். அவன் டிரங்க் பெட்டியைக் காண வில்லை. பெட்டியில் இருபத்தைந்து ரூபாயும் அவன் ஆடையணிகளும் இருந்தன.

"வஞ்சகி!"—அவன் இதயத்தி லிருந்து உஷ்ணத்துடன் ஒலித்தது இந்தச் சொல். கண்ணீர் வடித்து எப்படி ஏமாற்றி விட்டாள்! அவனுக்கு வெட்கமாக இருந்தது.

இது நிகழ்ந்து ஒரு வாரமாகி விட்டது. அன்று எழும்பூர் ஸ்டேஷன் பக்கம் வந்து

கொண்டிருந்தான் கதிரேசன். அங்கே ஏதோ அதிசயம் நடந்தது போல் கும்பலாக ஜனங்கள் நின்று கொண்டிருந்தனர். அந்த ஜனத் திரளிடையே இரண்டொரு போலீஸ் தலைகள் தென்பட்டன. என்ன விஷயம் என்பதை அறிய அந்தக் கூட்டத்துக்குள் சென்றான். அங்கே ஒரு உருவத்தைப் பார்த்ததும்தான் அதிர்ச்சியடைந்து போய் விட்டான். அந்த நாகரிக அழகி சந்திரா போலீஸ்காரர்களின் பாதுகாப்பில் நின்று கொண்டிருந்தாள். பக்கத்தில் உள்ளவர்கள், ஏதோ திருட்டு வழக்கில் அவளைக் கைது செய்திருப்பதாகப் பேசிக் கொண்டனர். 'பல நாள் திருட்டு ஒரு நாள் அம்பலமாக வேண்டியதுதானே' என்று தனக்குள் கூறிக்கொண்டான். தன் பெட்டி விஷயமாக ஒரு புகார் கொடுக்கலாமா என்று ஒருகணம் எண்ணினான். ஒரு பெண்ணிடம் ஏமாந்து விட்டதை வெளியில் சொல்லிக் கொள்வது அவமானம் என்று நினைத்து அந்த எண்ணத்தை அவன் விட்டு விட்டான்.

இவைகளை நினைவுபடுத்திக் கொண்ட கதிரேசன் 'என்னதான் அழகு இருக்கட்டுமே. இவளை மணந்து கொள்வேனா!' என்று தன் மனத்துக்குள் கூறிக் கொண்டான்.

சென்னை வந்த பின் ஒரு மாதம் கழித்துக் கதிரேசனுக்கு ஒரு கடிதம் வந்தது. ஆம், சந்திராதான் எழுதியிருந்தாள்.

"திரு கதிரேசன் அவர்களுக்கு வணக்கம்.

கல்யாணம் பெண்களுக்கே ஒரு விலங்கு என்றுதான் இவ்வளவு நாட்களும் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அன்று ரயிலில் நான் உங்களைச் சந்தித்த பின், தாங்கள் என்னிடம் காட்டிய பரிவும் கண்ணியமும் கல்யாணமே செய்து கொள்ளக் கூடாது என்ற என் உறுதியை மாற்றும்படி செய்து விட்டன. அன்று நான் எதிர்பாராத வகையில் தங்களிடம் சொல்லிக் கொள்ளாமல் திருச்சியில் இறங்க நேர்ந்து விட்டது. என் மாமா மகன்—யார் கழுத்தில் என்னைக் கட்டப் போகிறார்களென்று பயந்து ஓடி வந்தேனோ, அந்தப் பெண் பித்தன்,—திருச்சி ஸ்டேஷனில் நின்று கொண்டிருந்தான். என்னைப் பார்த்து விட்டான். அவ்வளவு தான். வேகமாக நான் இருந்த பெட்டியை நோக்கி வந்தான். எனக்குப் பயம் சூழ்ந்து கொண்டது. எப்படியும் அவன் கண்களிலிருந்து தப்ப நினைத்தேன். அந்தச் சமயம் தாங்கள் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். மற்றொரு பக்கத்து வழியாக இறங்கி விட்டேன். அவனிடமிருந்து சமாளிப்பதற்குள் ரயில் நகர்ந்து விட்டது. மறுநாள் தான் சென்னை வர முடிந்தது. சென்னையில் தங்களைக் கண்டு பிடித்து விடலாமென்று எவ்வளவோ முயன்றேன். முடியவில்லை. முடிவில் போலீஸார் என்னைச் சந்தேகப்பட்டுப் பிடித்துக் கொண்டனர். ஏற்கனவே என் தந்தை என்னைப்பற்றிப் போலீஸில் புகார் கொடுத்திருந்ததால் என் தந்தையிடமே என்னைச் சேர்த்து விட்டனர்.

என் மன நிலையறிந்த என் தந்தை இந்தப் பெண் பித்தனுக்கு என்னைக் கொடுக்கும் எண்ணத்தை விட்டு விட்டார். பிறகு எத்தனையோ வரன்கள் என்னை விரும்பி வந்தன. ஏனோ என்னால் அவர்களை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தெய்வாதீனமாகத் தாங்களே என்னைப் பார்க்க வந்தீர்கள்! 'நான் செய்த பாக்கியம்' என்று தான் எண்ணினேன். ஆனால் இதுவரை தங்களிடமிருந்து எவ்வித பதிலும் வரவில்லை. எனவேதான் நானே கடிதம் எழுதுகிறேன். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. தாங்கள் என்னை ஏற்றுக் கொள்ளவில்லையானால் கன்னியாகவே வாழ்வது என்பதுதான் என் முடிவு.

சந்திரா."

கடிதத்தைப் படித்ததும் சில நிமிஷங்கள் சிந்தனை வசப்பட்டான் கதிரேசன். அந்தக் கடிதத்தை அவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பெட்டியைப்பற்றி எதுவும் குறிப்பிடாமல் எவ்வளவு சாமர்த்தியமாக மழுப்பி இருக்கிறாள்! அந்தக் கடிதத்தை அவன் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்து விட்டான்.

அன்று அவன் ஆபீஸ் புறப்பட்டுக் கொண்டிருக்கும் சமயம் ஒரு போலீஸ் சேவகர் வந்து "கதிரேசன் யார்!" என்று கேட்டான்.

"நான்தான், ஏன்!" என்றான் கதிரேசன்.

"இன்ஸ்பெக்டர் உங்களைக் கூட்டி வரச் சொன்னார்" என்றான்.

என்னவோ ஏதோவென்று பயந்தவாறே அவனைத் தொடர்ந்து சென்றான் கதிரேசன்.

"மிஸ்டர், கதிரேசன்! இது உங்களுடையது தானா பாருங்கள்!" என்று இன்ஸ்பெக்டர் காட்டிய அந்தப் பொருள்களைக் கண்டதும், வியப்படைந்து போய் விட்டான் கதிரேசன். காணாமல் போன அவனது பெட்டியும் மற்றப் பொருள்களும்தான் அவை!

"ஆம். என்னுடையதுதான். எப்படிக் கிடைத்தன" என்று வியப்புடன் கேட்டான்.

இன்ஸ்பெக்டர் கைதியாக நின்று கொண்டிருந்த ஒரு ஆசாமியைக் காட்டி, "இவன் வீட்டில் சோதனையிடும்போது இவைகள் கிடைத்தன. உங்கள் விலாசம் இந்தப் பெட்டியில் இருந்ததால் தான் உங்களுக்குத் தகவல் கொடுக்க முடிந்தது. இவன் ரயிலில் திருடி, எத்தனையோ தடவை ஜெயிலுக்குப் போயிருக்கிறான்" என்றார்.

மேற் கொண்டு அவர் என்ன கூறினாரோ கதிரேசன் அறியவில்லை. களங்கமற்ற சந்திராவின் உருவம் அவன் இதயத்தில் மலர்ந்தது. "எவ்வளவு உருக்கமாகக் கடிதம் எழுதியிருந்தாள்! கொஞ்சமாவது சிந்திக்காமல் அவசரப்பட்டுக் கிழித்தெறிந்து விட்டேனே!" என்று மிகவும் வருந்தினான்.

வீட்டருகில் வந்ததும் அவனுக்கு ஒரு அதிசயம் காத்திருந்தது. வீட்டின் முன் சந்திரா நின்று கொண்டிருந்தாள். "சந்திரா......!" என்று அலறிக் கொண்டே ஓடிப்போய் அவள் கைகளைப் பற்றிக் கொண்டான்.

"என் கடிதத்துக்குப் பதில் போடாமல் இருந்து விட்டீர்களே! என் அப்பா இன்னொரு மாப்பிள்ளையை ஏற்பாடு செய்ய ஆரம்பித்து விட்டார். என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தங்கள் மாமாவிடம் விலாசத்தை அறிந்துகொண்டு இங்கே வந்து விட்டேன்" என்றாள் சந்திரா கண் கலங்க.

'கவலைப்படாதே, சந்திரா! உன்னையே கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டேன். சந்திரா! இனி நீ என்னுடைய மனைவிதான்!" என்றான் கதிரேசன்.





தண்ணீர் வண்டி (500 காலன் அளவு)



தண்ணீர் பீப்பா கை வண்டி (30 காலன் அளவு)



தண்ணீர் வண்டி (250 காலன் அளவு)



# இந்தியாவில் செய்யப்பட்டவை

# ஸிம்ஸன் & கோ லிமிடெட்

மவுண்ட் ரோட், மதராஸ்.

கிளைகள் :— பங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, ஹைதராபாத் (தக்காணம்)

பம்பாய் நகரம் யாருக்குச் சேர வேண்டும் என்று வாதப் பிரதி வாதங்கள் நடைபெற்று வருகின்றன. மகாராஷ்டிரர்கள் தங்களுக்கு வேண்டும் என்கிறார்கள். குஜராத்திக்காரர்கள் தங்களுடையது என்கிறார்கள், ஆனால், பம்பாயைத் தமிழ்நாடாகவே மாற்றி விட்டார்கள் பம்பாய் நகரத்தில் குடியேறியிருக்கும் தமிழர்கள். தமிழையும், தமிழர் நாகரிகத்தையும், தமிழ்ப் பண்பாட்டையும் பம்பாய் நகரில் மிகச் சிறந்த முறையில் வளர்த்து வருகிறார்கள். சில மாதங்களுக்கு முன்னால் ஷண்முகானந்த சபையார் தமிழ் நாட்டிலிருந்து பல கலைஞர்களை வரவழைத்துப் பெரிய கலை விழா நடத்தினார்கள். அதைத் தொடர்ந்து இந்த மாதத்தில் இன்னொரு கலை விழா கோலாகலமாக நடைபெற்றது.

மார்ச் மாதம் 2ந் தேதி முதல் 11ந் தேதி வரையில் பம்பாய் நகரில் கலை மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. பம்பாய் பாரதீய சங்கீத சபையின் மூன்றாவது ஆண்டு விழாவைத்தான் பெரிய கலை விழாவாகக் கொண்டாடினார்கள். கர்நாடக சங்கீதம், இந்துஸ்தானி சங்கீதம், இந்திய நடனம், கதக் நடனம் முதலிய கலை நிகழ்ச்சிகள் இடம் பெற்றிருந்தன. இந்தக் கலை நிகழ்ச்சிகளைப் பம்பாய் முதன் மந்திரி திரு மொரார்ஜி தேசாய் துவக்கி வைத்தார். ஆயிரக் கணக்கான மக்கள் விஜயம் செய்து விழாவைச் சிறப்பித்தனர். இவ்விழா நிகழ்ச்சிகள் சிலவற்றைப் படத்தில் காணலாம்.

1. மகாராஜபுரம் விச்வநாதய்யரின் இசை விருந்து. 2. சாயி சுப்புலக்ஷ்மி நாட்டியத்துக்குத் தலைமை வகித்த மேஜர் ஜெனரல் திம்மையா பேசுகிறார். 3. படே குலாம் அலிகானின் கச்சேரி. 4. ஆலத்தூர் சகோதரர்களின் இன்னிசை. 5. விழாவை ஆரம்பித்துவைத்த திரு மொரார்ஜி தேசாய். 6 ஸ்ரீமதி எம். எல். வசந்த குமாரியின் கான விருந்து. 7. நாராயணசாமியின் கச்சேரி. 8 கதகளி நடனத்துக்குத் தலைமை வகித்த திரு பிருத்வி ராஜ் பேசுகிறார். 9. கதகளி நடனத்தில் ஒரு இனிய காட்சி.



வெள்ளித் திரை

# நாகதேவதை

“ஏன் ஸார், நாகதேவதை பார்த்தீர்களா! பார்க்கா விட்டால் அவசியம் பார்த்து விட்டு வாருங்கள்!” என்றார் ஒரு நண்பர்.

இன்னொரு நண்பர், “ஏன் ஸார், நாக தேவதை பார்க்க வில்லையே! பார்க்காவிட்டால் ஒன்றும் குடி முழுகி விடாது. நல்ல தாய்ப் போயிற்றென்றே சொல்லுவேன்!” என்றார் மிகவும் காரமாக.

இந்த இரண்டுவித அபிப்பிராயங்களையும் மனத்தில் வைத்துக் கொண்டு நான் ஏ.வி.எம். புரொடக்ஷன்ஸ் தயாரித்த “நாகதேவதை”யைப் பார்க்கப் போனேன்.

நம் நாட்டு ஹிந்துமதக் குடும்ப ஸ்திரீகள் பொதுவாக விரும்பும் தெய்வாம்சம் பொருந்திய நிகழ்ச்சிகளையும், தெய்விகக் கருத்துக்களையும் கொண்ட படம் “நாக தேவதை”. முதலில் கன்னட பாஷையில் எடுக்கப்பட்டுத் தமிழ் விளக்கத்துடன் வெளியிடப்பட்டது. இப்போது தமிழில் ‘டப்’ செய்யப்பட்டிருக்கிறது.

அதல பாதாளத்தில் இருக்கும் நாகலோகத்தின் அதி தேவதையும், பிறை சூடிய பெருமானின் மானஸ புத்திரியுமாகிய மானஸா தேவிக்குத் தன்னை அகில உலகமும் வழிபட்டு வணங்க வேண்டும் என்னும் ஆசை வெறி பிடித்தது. அந்த ஆசை நாட்டு மக்களை அழித்தது: நாட்டை ஆளும் மன்னன் சந்திரதரனைத் துன்புறுத்தியது; அவன் மக்கள் அறுவரைப் பலி கொண்டது; கடலில் புயலையும் மழையையும் கிளப்பிக் கப்பலையே கவிழ்த்தது; ஆனால் அந்த ஆசையினால் மன்னன் சந்திரதரனின் மாறாத சிவபக்தியை அசைக்க முடியவில்லை. மானஸா தேவி எப்படியும் அவனைத் தன்னடியில் வணங்கச் செய்ய உறுதி பூண்டு, தன் சக்தியை வேறு விதத்தில் செலுத்தினாள்; சந்திரதரனுக்கு லக்ஷ்மீந்திரன் என்னும் மகனை அளித்து அவன் மூலம் வஞ்சம் தீர்க்க நினைத்து அவனுக்கு மணம் முடிந்த அன்றே, நாகத்துக்குப் பலியாவான் என்னும் கொடிய சாபத்தை ஏற்படுத்தினாள். அதனால் ஏற்கனவே பக்கத்து நாட்டு இளவரசி விபுலாவுக்கும் லக்ஷ்மீந்திரனுக்கும் ஏற்பட்டிருந்த காதல் அழியப்பார்த்தது; சமயத்தில் காதலர்கள் குறுக்கிட்டுப் பிடிவாதமாக மணந்து கொள்ளுகின்றனர். சாபம் பலித்து விட்டது. பாம்புக்கு இரையானான் பாராளும் மன்னவன் புத்திரன்.



அரசிளங் குமரன் லக்ஷ்மீந்திரனாக நடித்த கே. மோகனுக்கு, இந்தப் படத்தில் யாருக்கும் கிட்டாத அபூர்வ வாய்ப்புக் கிட்டியது. படத்தின் பெரும் பகுதிகளில் உயிரில்லாதவனாக நடிக்கக் கிட்டிய வாய்ப்பைத்தான் கூறுகிறேன். அதில் அவரது நடிப்பை யார் குறை கூற முடியும்!

கணவனின் சடலத்துடன் வீரபத்தினியான விபுலா, ஆற்று வெள்ளத்தில் தெப்பத்தில் ஏறிச் செல்லுகிறாள். கைலாசம் சென்று, கண்ணுதற் பெருமானைக் கண்டு கணவனின் உயிரை மீட்டு வரச் செல்லும் அவளது பதிபக்திக்கும் மனோ திடத்துக்கும் மானஸா தேவியின் சூழ்ச்சிகள் இடைவிடாது சவால் விட்டுத் தோல்வியடைகின்றன. கற்புக்கரசியான விபுலா தேவி தந்த சாபம் மானஸா தேவியைப் பற்றிப் பேயாக்குகிறது.

காந்தன்

இளவரசி விபுலாவாக நடிக்கும் ஜமுனா இந்தப் படத்தில் நன்றாய் நடித்திருக்கிறார். மற்ற நடிகர்களைப் பற்றி விசேஷமாக எதுவும் கூறுவதற்கு அவர்கள் இடம் வைத்துக் கொள்ள வில்லை.

இந்தப் படத்தில் எந்த நிகழ்ச்சியையும் பார்த்து, ஏன் நிகழ்கிறது, எப்படி நிகழ முடியும், அப்படி நிகழுவது சரிதானா என்றெல்லாம் கேட்க முடியாது! தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம் தேவதையின் அருளும், கற்புக்கரசியின் பிரபாவமுமாயிருக்கும்போது யார் என்ன பேச முடியும்? மேலும் கதை ஆரம்பத்திலிருந்து முடிவு வரையில் பார்வதி பரமேசுவரன் இடைவிடாது கவனித்து, இறந்தவர்களுக்கு உயிர் கொடுத்து, வீழ்ந்தவர்களுக்கு வாழ்வளித்து, கதையைக் கடைசியில் சுபமாக முடித்து வைக்கக் கங்கணம் பூண்டிருக்கும் போது கதை வேறு விதமாக எப்படி முடியும்!

ஏ. வி. எம். புரொடக்ஷன்ஸ் பிரமாதமாக எடுத்திருக்கும் "நாகதேவதை" படத்தில் பாம்புகளும் பிரமாதமாகப் படம் எடுத்திருக்கின்றன! இரும்புக் கோட்டைக்குள் நுழைந்த பாம்பின் சாகஸம் பிரமாதம். விபுலாவின் பிரார்த்தனைக்குட்பட்டு அவன் கணவனைத் தீண்டாமல் சென்ற காட்சியில் உணர்ச்சியூட்டும் விதத்தில் அது நடித்திருக்கிறது.

சர சர வென்று தொடர்ந்து வந்த அடுத்த பாம்பு அவன் உயிரைக் கவர்ந்து கதையை மேலே தொடரச் செய்கிறது. மானஸா தேவியின் கொடூர சித்தத்தினால் நாடு முழுவதும், நகரம் முழுவதும், அரண்மனை முழுவதும் கொடிய விஷப் பாம்புகளின் ஆதிக்கம் ஏற்பட்டு ஒரேயடியாகக் குழப்பம் விளைகிறது. இந்தக் காட்சிகள் படத்துக்கு விறுவிறுப்பையளிக்கின்றன. நடிகர்களின் நடிப்பு விஷயத்தில், படமெடுத்த பாம்புகள்தான் படமெடுத்தவர்களின் மதிப்பை உயர்த்துகின்றன.

காட்சி ஜோடனைகளும், தத்ரூபமான புயல் காட்சியும் ஏ. வி. எம். புரொடக்ஷன்ஸின் தரம் குறையாத படப் பிடிப்புத் திறத்தை எடுத்துக் காட்டுகின்றன. சங்கீதம், டைரக்ஷன், திரைப்பட உத்திகள் முதலிய எல்லா அம்சங்களிலும் 'நாகதேவதை' சிறந்து விளங்குகிறது. ஒளிப்பதிவு, ஒலிப்பதிவு எல்லாம் நன்கு கவனிக்கப்பட்டிருக்கின்றன. தமிழ் 'டப்பிங்' முறையும் நல்ல முறையில் அமைந்திருக்கிறது.

கணக்கற்ற களிமண் பிள்ளையார்களை உடைத்தாலும் கலங்காத தெய்வ பக்தி உணர்ச்சி கொண்ட நம் நாட்டு மக்கள் "நாகதேவதை" படத்தைக் கூட்டம் கூட்டமாகப் போய்ப் பார்ப்பதில் அதிசயப்படுவதற்கு ஒன்றும் இல்லை. படத்தின் ஆரம்ப முதல் கடைசி வரையில் 'ஓம் நமசிவாய' சப்தம் தான் நிறைந்திருக்கிறது.

நாகதேவதை படத்தைப்பற்றி நம் அபிப்பிராயம் — ஓம் நமசிவாய!



# வட இந்திய யாத்திரை 35

பிரும்மாண்டமான இமயமலை எத்தனை எத்தனையோ உருவங்களில் உயர்ந்தும் தாழ்ந்தும் வளைந்தும் நெளிந்தும் செல்கிறது. அப்படிச் செல்லும்போது சில இடங்களில் தனித் தனி மலைகளாகப் பிரிந்து நிற்கிறது. அவ்வாறு பிரிந்து நிற்கும் ஒரு இடத்தில் உள்ள இடைவெளி வழியாக ஓடிவரும் நதிதான் பூஞ்ச். சமுத்திர மட்டத்திலிருந்து மூவாயிரம் அடி உயரம் உள்ள இந்த நதிக்கரையில் அமைந்திருக்கும் நகரம்தான் பிரசித்தி பெற்ற பூஞ்ச் நகரம். பூஞ்ச் நகரத்தில் ஜம்முவில் இருந்த உஷ்ணம் இல்லை. ஜிலு ஜிலுவென்று குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்தது. இப்பொழுது தான் காஷ்மீரத்துக்கு அருகில் வந்து விட்டோம் என்பதை உணர்ந்துகொள்ள முடிந்தது.

யுத்த சமயத்தில் பூஞ்ச் நகருக்குச் செல்லும் பூஞ்ச் நதியின் பாலத்தை எதிரிகள் உடைத்து விட்டார்கள். ஆகையால் உடைந்த பாலத்தின் வழியாக ஜீப் வண்டிகள் போவதற்கு நமது ராணுவத்தினர் ஒரு தொங்கு பாலம் கட்டி வைத்திருக்கிறார்கள். அந்தப் பாலத்தின் வழியாகப் பூஞ்ச் நகருக்குள் புகுந்து செல்வோம்.

பூஞ்ச் மிகப் பழமையான சிறிய நகரம். நகரம் சிறியதாக இருந்தாலும் இரண்டு உயர்தரப் பாடசாலைகள் இருக்கின்றன. பள்ளிக் கூடத்தின் பொது மொழி உருதுதான். ஆனாலும் ஆரம்பப் பாடசாலையில் பிள்ளைகளுக்கு உருது, இந்தி, பஞ்சாபி ஆகிய மூன்று மொழிகளையும் கற்றுக் கொடுக்கிறார்கள்.

ஜம்முவில் நாம் பார்த்ததுபோலவே இங்கும் பல ராணுவ முகாம்கள் இருக்கின்றன. அங்கெல்லாம் அகில இந்திய பத்திரிகையாளர்களை அழைத்துச் சென்று காண்பித்தனர்.

இதுவரையில் நாம் பார்க்காத முறையில் இங்கு ஒரு ராணுவ முகாம் இருக்கிறது. இது 1948-ம் ஆண்டு ஆரம்பித்த பட்டாளம். இதற்குத் "தேசிய ராணுவம்" என்று பெயர். மிகவும் முக்கியமான ராணுவ முகாம்களில் இது ஒன்று. இந்த ராணுவத்தில் உள்ள மொத்த வீரர்களில் பாதிப் பேர் முகம்மதியர்கள். பாதிப்பேர் ஜம்மு காஷ்மீரைச் சேர்ந்த முஸ்லிம் அல்லாதவர்கள். இதில் உள்ளவர்கள் எல்லாரும் தாங்களாகவே ராணுவத்தில் சேவை



## பூஞ்ச்



செய்ய வந்தவர்கள். தங்கள் நாட்டின் சுதந்திரத்தைக் காப்பதற்காக, ஜம்மு — காஷ்மீர் இந்தியாவுடனேயே இணைந்து இருப்பதற்காக. கொள்ளைக் கூட்டத்தினரையும், பாகிஸ்தான் எதிரிகளையும் எதிர்த்துப் போராடுவதற்காக உற்சாகத்துடன் வந்து சேர்ந்தவர்கள். இவர்களுக்கு வேண்டிய ராணுவப் பயிற்சிகளை நாலு இந்திய ராணுவ அதிகாரிகள் அளித்து வருகிறார்கள். ஜம்மு — காஷ்மீர் பிரச்னை தீர்ந்து அமைதி ஏற்படும் வரையில் இந்தத் தேசிய ராணுவ சேனையும் இருக்கும். இதற்குப் பிறகு இந்தச் சேனையை எப்படி உபயோகப்படுத்தப் போகிறார்களோ!

பூஞ்ச் நகரிலிருந்து காஷ்மீரத்துக்கு நடந்தே சென்று விடலாம். சுமார் முப்பது மைல் தூரம்தான் பூஞ்சிலிருந்து காஷ்மீரம். ஆனால் நடந்து செல்லுவது என்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. பூஞ்ச் நகருக்கும் காஷ்மீரத்துக்கும் இடையில் இமயமலையின் ஒரு பகுதியான பன்னிரண்டாயிரம் அடி உயரமுள்ள பீர்பஞ்சால் மலை குறுக்கே நிற்கிறது. அதற்கு மத்தியில் உள்ள சிறு கணவாய் வழியாகப் புகுந்து செல்ல வேண்டும். அந்த வழி பூஞ்ச் நகருக்குப் பதினறு மைல்களுக்கு அப்பால் உள்ள மண்டி என்னும் கிராமத்துக்கு அருகில் இருக்கிறது.

மண்டி ஒரு முக்கியமான கிராமம். இங்கெல்லாம் இந்திய ராணுவம் பாகிஸ்தான் ராணுவத்துடன் மிகக் கடுமையான போர் நடத்தி வெற்றிக் கொடி பிடித்திருக்கிறது. பூஞ்ச் நகரம் சுமார் பதினைந்து மாத காலம் எதிரிகளின் கையில் இருந்து படாத பாடு பட்ட பரிதாபத்துக்குரிய நகரம். குரங்கு கையிலே அகப்பட்ட பூமாலை போல் பூஞ்ச் நகரம் சிதைந்து கிடக்கிறது.

பூஞ்ச்நகரை எதிரிகளிடமிருந்து மீட்டு அங்குள்ள மக்களைக் கொடுமையிலிருந்து காப்பதற்காக நமது இந்திய ராணுவம் எத்தனை எத்தனையோ வீர சாகசங்களைச் செய்ய வேண்டியிருந்தது. அப்பொழுது மண்டி ஒரு முக்கிய ராணுவ கேந்திரமாகத் திகழ்ந்தது. அந்தப் புகழ்பெற்ற மண்டி கிராமத்தைப் பார்க்க வேண்டாமா!

### மண்டி கிராமம்

**வா**ருங்கள், மண்டிக்குச் சென்று வருவோம். நமக்குப்பழக்கப்பட்டுப்போன பயங்கர சாலைகளைப் போல்தான் மண்டிக்குச் செல்லும் சாலையும் இருக்கிறது. மலையின் விளிம்பில் அபாயமான இடத்தில் அமைந்திருக்கும் இந்தச் சாலையில் ஜீப் வண்டிகள் ஓட்டுவது இதர இடங்களை விட இன்னும் கொஞ்சம் சிரம சாத்தியமானது. காரணம், எதிர் எதிரே திடீர் திடீர் என்று மலைகள் குறுக்கிடுகின்றன. நதிகள் குறுக்கிடுகின்றன. நதிகளில் எல்லாம் சாதாரணமாக அவசரத்துக்கு மட்டும் உபயோகப்படுத்தக் கூடிய அதிக பலம் இல்லாத பாலங்களைப் போட்டிருக்கிறார்கள். இதில் ஜீப் வண்டியில் போவதற்கு உண்மையிலேயே தைரியம் வேண்டும்.

# நதிக்கரையில்

பகீரதன்

ஜீப் வண்டிகள் மண்டி கிராமத்துக்குள்ளே செல்ல முடியாது. மண்டியை அடுத்து வரும் நதிக்கு இக்கரையிலேயே ஜீப் வண்டிகள் நின்றுவிட வேண்டியதுதான். காரணம் இங்கு ஜீப் வண்டி போவதற்கு வசதியாகப் பாலம் கிடையாது. மனிதர்கள் நடமாடுவதற்கு ஏற்ற வண்ணம் மரப்பாலம்தான் போட்டிருக்கிறார்கள். அந்தப் பாலத்தில் நடந்து போகும்போது கீழே நதி நதியில் வேகமாக ஓடும் தண்ணீரைப் பார்த்தால் தலை சுற்ற ஆரம்பித்து விடுகிறது. மேலே அடி எடுத்து வைக்க முடியவில்லை. அப்படி வைத்தாலும் பாலத்தில் வைக்கிறோமா பாதாளத்தில் வைக்கிறோமா என்ற சந்தேகம் வந்து விடுகிறது. இந்தப் பாலத்தைக் கடப்பதற்குள் ஒரு பத்திரிகையாளர் பட்டபாட்டையும், அவர் முகம் போன போக்கையும் நினைத்தால் மனிதர்களுக்கு அவர்களையும் அறியாமல் அவர்கள் உயிரின்மீது உள்ள ஆசையைத் தெரிந்துகொள்ள முடிகிறது. ஆமாம்! இந்த ஆசை இல்லாவிட்டால் எப்படி உலகம் வியக்கும் காரியங்களை மனிதனால் செய்ய முடியும்!

மண்டி கிராமத்துக்குள் செல்வதற்கு முதலில் அங்குள்ள கடைவீதி வழியேதான் செல்ல வேண்டும். இருபுறமும் வரிசையாகக் கடைகள் இருக்கின்றன. இந்திய சிப்பாய்களும், பத்திரிகையாளர்களும் கடை வீதிக்குள் நுழைந்ததும் ஒவ்வொரு கடையில் உள்ளவர்களும், "ஜெய், ஹிந்த்!" என்று கோஷமிட்டு வரவேற்றனர். நமது ராணுவத்தைக் கண்டதும் அவர்களுக்கு அவ்வளவு மரியாதை, மகிழ்ச்சி.

கடைவீதி முடிந்தவுடன் நதி நதிக் கரையில் ஒரு கோயில் தென்படுகிறது. அதுவும் இந்துக்களின் கோயில். எங்கு பார்த்தாலும் முசுலிமியர்கள் சூழ்ந்துள்ள இடத்தில் இந்தக் கோயிலைப் பார்த்தபோது ஒரு கணம் வியப்பு ஏற்படத்தான் செய்கிறது. சோட்டா அமர்நாத் என்ற புகழ் பெற்ற அந்தச் சிறிய கோயில் கோபுரம் நம்மை வரவேற்கிறது.

### அர்ச்சகரின் ஆசை

கோயிலுக்குள் செல்வோம். அங்கு மூல விக்கிரகம் வெறும் வெள்ளை சலவைக் கல் மலைதான். சுமார் நாலடி உயரம் உயர்ந்திருக்கிறது. அந்த மலைக்குத்தான் அபிஷேக ஆராதனைகள் நடக்கின்றன. அதற்கு அருகில் சில சாளக் கிராமங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன.

கோயிலுக்கு அருகில் கண்ணையும் கருத்தையும் கவரும் வனப்புடன் கூடிய இரண்டு 'சரு' மரங்கள் இருக்கின்றன. அந்த மரங்களைப் பார்க்கும்போதே மனத்தில் என்னென்னவோ கற்பனைகள் பொங்கி வருகின்றன. ஆமாம், அவ்வளவு அழகாக இருக்கின்றன. சரு மரத்தின் அமைப்பைப் பார்த்தால், பருவமங்கை ஒருத்தி பச்சை நிறப் பட்டுப் புடவை ஒன்றைப் பகட்டாக உடுத்திக் கொண்டு ஒய்யாரமாக நிற்பது போன்ற பிரமையை நமக்கு அளிக்கிறது. இப்படிப்பட்ட மரங்களுக்கு மத்தியில்தான் சோட்டா அமர்நாத் அமைதியாகக் கோயில் கொண்டிருக்கிறார்.

இந்தக் கோயிலை மோதி மகாராஜா என்பவர் கட்டினார். இந்தக் கோயிலுக்கு அருகிலேயே அவருடைய சமாதியும் இருக்கிறது.

"இங்கு வந்து எதற்காக இந்தக் கோயிலைக் கட்டினார்!" என்றார் ஒரு பத்திரிகையாளர்.

"ஏன் உங்களுக்கு இந்தச் சந்தேகம்!" என்று கேட்டார் அந்தக் கோயிலில் இருந்த வயது முதிர்ந்த அர்ச்சகர்.

"இந்துக்களே இல்லாத இடத்தில் இந்துக்களுக்குக் கோயில் கட்டி வைத்திருக்கிறாரே என்றுதான் வியப்பாயிருக்கிறது."

"உங்கள் சந்தேகம் என்னமோ சரிதான்! ஆனால் மோதி மன்னன் கோயில் கட்டிய காலத்தில் இங்கு முஸ்லிம்களே கிடையாது. இப்பொழுது இருப்பவர்கள் எல்லாரும் மூன்று நான்கு தலைமுறைகளுக்கு முன்னால் இந்துக்களாக இருந்தவர்கள்தான்" என்று பொங்கி வரும் உணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொண்டு சொன்னார். சற்று நேரம் பத்திரிகையாளர்களைக் கூர்ந்து பார்த்தார். மேலே பேச ஆரம்பித்தார். அவருடைய பேச்சில் ஆழ்ந்த அனுபவம் நிறைந்திருந்தது. அவர் சொன்ன விஷயங்களைக் கேளுங்கள்:

"ஒரு காலத்தில் மண்டியில் இருந்தவர்கள் எல்லாரும் இந்துக்கள்தான். இன்றோ மண்டி கிராமத்தில் நாலே நாலு இந்துக்கள் இருக்கிறார்கள். அவர்களும் காலப் போக்கில் மதம் மாறிவிட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. இந்து மதம் காஷ்மீரைப் பொறுத்த மட்டும் க்ஷீணித்து விட்டது. இந்த நிலை மேலும் வளராமல் இந்து மதத்தில் அக்கறையுள்ளவர்கள் தொண்டாற்றவேண்டும். இந்து மதத்தில் யார் சேரவிரும்பினாலும், அவர்கள் கிறிஸ்தவர்கள் ஆனாலும், முகம்மதியர்கள் ஆனாலும் வேறு எந்த மதத்தைச் சேர்ந்தவர்களானாலும் அவர்களுக்கு இந்து மதக் கதவுகளைத் திறந்து விட வேண்டும். அப்படிச் செய்வதற்கு இன்றைய இந்து மதத் தலைவர்கள் வழி வகுக்கவில்லை என்றால், எதிர்காலத்தில் இந்துமதம் க்ஷீணித்து விடும் என்பதில் சந்தேகமில்லை" என்றார்.

"இந்து மதத்துக்கும் ஜம்மு — காஷ்மீர் யுத்தத்துக்கும், இந்திய நாட்டுச் சுதந்திரத்துக்கும் என்ன சம்பந்தம்!" என்று கேட்டார் இன்னொரு பத்திரிகையாளர்.

"இந்த தேச சுதந்திரத்தின் எதிர்காலம் பலம் உள்ளதாக இருக்க வேண்டுமானாலும் அதற்கு இந்தச் சீர்திருத்தம் அவசியம். இந்தியாவில் உள்ள இதர மதத்தினர் மதம் காரணமாக அவர்கள் தாய்நாடு மக்காவாகவும், ஜெருஸலமாகவும் நினைத்து வருகின்றனர். இது ஒரு சுதந்திர நாட்டின் சுதந்திரத்தைப் பாதிக்கக் கூடிய உணர்ச்சியை வளர்க்கக்கூடும். ஆகையால் இதர மதத்தினர் இந்து மதத்தில் சேருவதற்கு வழி செய்ய வேண்டியது அவசியம்" என்று கூறி அர்ச்சகர் சற்று நிறுத்தினார். அப்பொழுது சுருக்கங்கள் நிறைந்த அவருடைய முகத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் எழுந்து மறைவது தெரிந்தன.

அவருடைய உணர்ச்சியைத் தடை செய்ய விரும்பாமல் அவரையே பத்திரிகையாளர்கள் பார்த்துக் கொண்டிருந்தனர்.

ஒரு தரம் தொண்டையைக் கனைத்து விட்டுக்கொண்டு அர்ச்சகர் பேச ஆரம்பித்தார். "என்ன, இந்து மதச் சீர்திருத்தப் பிரசாரமாக இருக்கிறதே! இந்த அர்ச்சகரிடம் எக்கச்சக்க

# அதோ! புன்னகையில் மாயஜாலம் தவழுகிறது...



## அதை உபயோகியுங்கள்.

மின்வெட்டு நேரத்தில் ஆசையூட்டும் பினகா புன்னகையினால் சபையோர்களை வசீகரியுங்கள். பினகா உபயோகிப்பதால், கவலையில்லாமல் நீங்கள் புன்னகை புரியலாம், ஏனெனில் இது பற்களுக்குச் சிறந்த பாதுகாப்பை அளிக்கிறது. மேலும் இது பற்களின் மூலைமுடுக்குகளை மிகவும் நேர்த்தியாகச் சுத்தம் செய்வதுடன், கெடுதல் விளைவிக்கும் கிருமிகளை நாசம் செய்து உங்கள் புன்னகைக்கு ஒரு சோபையையும் அளிக்கிறது.

ஆகவே மந்திரசக்தி வாய்ந்த 'பினகா' பெயரை உச்சரித்து, பிறகு அதை உபயோகியுங்கள்... தாமதமில்லாமல் இதை உடனேயே செய்யுங்கள்....அதோ உங்கள் புன்னகையில் ஒரு மாயஜாலம் தவழுகிறது.

சிறிதளவு பினகா மௌத்வாஷ் - இதன் மாய சக்தியைக் கவனியுங்கள்...

ஜலம் நிரம்பிய ஒரு தம்ளரில், சில சொட்டு இதைக் கலந்து வாயைக் கொப்பளியுங்கள். உங்கள் வாய், ஈறுகள், தொண்டை இவைகளுக்கு ஒரு டானிக் போல் வேலை செய்கிறது. மற்றும் தொத்து வியாதிகள் வராமல் தடுக்கிறது.

**'ஸிபா'வின் விசேஷ குணம் பொருந்திய பிராடக்டுகள்.**

CBK-27016

மாக மாட்டிக் கொண்டோமே என்று நினைக்கிறீர்களா!" என்று கேட்டார்.

பத்திரிகையாளர்கள் அதற்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் விழித்தனர்.

அர்ச்சகர் பத்திரிகையாளர்களின் பதிலைச் சற்றும் எதிர்பார்க்காமல் மேலே தம்முடைய பேச்சைத் தொடர்ந்தார்.

"ஒரு காலத்தில் இந்துமதத் தலைவர்கள் மிகப் பெரிய தவறு செய்து விட்டனர். காஷ்மீரத்தில் உள்ள முகம்மதியர்கள் அத்தனை பேரும் இந்து மதத்தில் சேருவதற்குத் தயாராக இருந்தனர். அப்பொழுது காஷ்மீரத்தை ஆண்ட மன்னனிடம் தங்களை இந்து மதத்தில் சேர்த்துக் கொள்ளும்படி முறையிட்டுக் கொண்டார்கள். ஆனால் இந்து மதத்தின் உண்மைத் தத்துவத்தை உணராத சில சுயநலம் படைத்த காஷ்மீர் பண்டிதர்களும், காசி நகர் பண்டிதர்களும் அதைத் தடுத்து நிறுத்தி விட்டனர். அவர்கள் சுயநலம் காரணமாகச் செய்த துரோகம் இன்று இந்தியாவின் வட எல்லையான காஷ்மீரத்தை, உலகத்திலேயே மிக அழகு வாய்ந்த சொர்க்க பூமியைக் காப்பதற்குப் பாரதம் கோடிக் கணக்கான ரூபாய்களையும், ஆயிரக்கணக்கான உயிர்களையும் இழக்க வேண்டி வந்தது. பாகிஸ்தான் இன்னமும் காஷ்மீரத்தைக் கபளீகரம் செய்வதற்குப் பல வழிகளில் முயன்று வருகிறது.

"இந்த உண்மை நிலையை உணர்ந்த பிறகாவது இந்து மதத் தலைவர்கள் இந்து மதத்தில் உள்ள வெறும் சம்பிரதாயங்களையும் சடங்குகளையும் விட்டொழிக்க முயல வேண்டும். மனிதர்கள் எல்லாரையும் சரிசமமாக எண்ணி அவர்களைச் சாதி நிற சமய வேறுபாடின்றி ஏற்றுக் கொண்டு இந்து மதம் தழைத்து வளருவதற்கு உடனே பாடுபட வேண்டும்."

இவ்வாறு சொட்டா அமர்நாத் கோயிலில் உள்ள வயது முதிர்ந்த அந்தப் பெரியவர், அனுபவம் நிறைந்த கோயில் அர்ச்சகர் கூறினார். இதை அவர் கூறுவதற்குள் பல முறை உணர்ச்சி வசப்பட்டு விட்டார். "என்னுடைய இந்த ஆசை நிறைவேறுவதற்கு நீங்கள் ஏதாவது வழி செய்ய வேண்டும்" என்று பத்திரிகையாளர்களைக் கேட்டுக்கொண்டார்.

## பூஞ்ச் நகரம்

பூஞ்சிலிருந்து மண்டி வரையில் பதினாறு மைல் தூரம் விவசாயம் நடைபெறுகிறது. பூஞ்ச் நகரம் உணவு விஷயத்தில் சுயதேவை பூர்த்தியுள்ள செழுமையான நகரம்.

வயலில் வேலை செய்யும் தொழிலாளிகள் எல்லாம் ஆண்கள்தான். அதாவது நாற்று நடுதல், களை எடுத்தல் முதலியவைகளைக் கூட ஆண்களேதான் செய்கிறார்கள். பெண்கள் எல்லாம் ஆடு மாடுகளை மலைக் காடுகளுக்கு ஓட்டிச் சென்று மேய்க்கிறார்கள். பெண்மணிகள் தலையில் விநோதமான தொப்பி அணிந்து கொண்டிருக்கிறார்கள். அந்தத் தொப்பிக்குள்ளேயே தங்களுக்கு வேண்டிய ஆகாரத்தையும், அதாவது சப்பாத்தி ரொட்டி முதலியவைகளையும் வைத்திருக்கின்றனர். ஆட்டுத்



அகில இந்தியப் பத்திரிகையாளர்கள் ஜம்மு யுத்தபூமி யாத்திரையை முடித்துக் கொண்டு பூஞ்ச் நகரிலிருந்து காஷ்மீரத்துக்கு விமானம் மூலம் பறந்து சென்றனர்கள். பூஞ்ச் விமான நிலையத்திலிருந்து விமானம் புறப்படுவதற்கு முன்னால் ஜம்மு - காஷ்மீரில் உள்ள உயர்தர ராணுவ அதிகாரிகள் பத்திரிகையாளர்களுடன் படம் பிடித்துக் கொண்டனர்.

தோலில் ஆன ஒரு பையில் குடிப்பதற்குத் தண்ணீர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

மண்டியில் ஏராளமான அருவிகள் இருக்கின்றன. இந்த அருவியின் வேகத்தைப் பிடித்து அதன் மூலம் மாவு அரைக்கும் யந்திரம் போன்ற இரண்டு பெரிய மலைப்பாறைகளை ஒன்றின்மீது ஒன்று சுழலும்படி செய்திருக்கிறார்கள். இதில் எந்தவிதமான செலவும் இல்லாமல் இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் கோதுமை மாவு அரைக்கும் அதிசயத்தைப் பார்த்து வியந்து போனேம். அருவியைப் பிடித்து மின்சாரம் உற்பத்தி செய்வது போல இங்கு கோதுமை மாவு அரைக்கும் இயந்திரங்களைச் சுழல வைத்திருக்கிறார்கள்.

பூஞ்ச் நகரை ஒரு தரம் சுற்றி வருவோம். மிகப் பழைய பெரிய வீடுகள். இடிந்து போன பல இந்துக் கோயில்கள் எல்லாம் சேர்ந்து பரிதாபமாகக் காட்சி அளிக்கின்றன. ஒரு காலத்தில் பஞ்சாபைச் சேர்ந்த ஒரு பகுதியாகவே இருந்திருக்கிறது பூஞ்ச் நகரம். பிறகு எப்படியோ காஷ்மீர் சமஸ்தானத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது!

இந்துக்களின் கோயில்களும், சீக்கியர்களின் குருத்வாரமும், முஸ்லிம்களின் பள்ளிவாசல்களும், நெருக்கமான கடைத் தெருக்களும், பழைய வீடுகளுமாக ஒரே குழப்பாக இருக்கிறது பூஞ்ச் நகரம். பல தடவைகள் இந்த நகரம் கொள்ளைக்காரர்களால் கொள்ளையடிக்கப் பட்டிருக்கின்றன. சாலைகள் எல்லாம் மிகவும் குறுகலானவை. கருங்கல்லைச் செங்கல் போல ஒரே அளவாகச் செய்து அதை நெருக்கமாக உயர வாட்டத்தில் புதைத்துப் பலமான சாலை போட்டிருக்கிறார்கள். வீதிகளில் குதிரையிலோ, அல்லது ஜீப் வண்டியிலோதான் போகலாம். காரணம் ஏற்றமும் இறக்கமும் உள்ள சாலைகள். அதில் நடந்து சென்றால் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்குகிறது. கொஞ்ச தூரம் அச் சாலைகளில் நடந்து போவதற்குள்ளாகவே அதிகமான களைப்பு ஏற்பட்டு விடுகிறது.

## நமது ராணுவம்

ஜம்முவில் இருந்து பூஞ்ச் வரையில் உள்ள முக்கியமான ராணுவ முகாம்களை எல்லாம் நேரில் பார்த்தோம். நமது ராணுவம் நிகழ்த்திய வீரம் நிறைந்த சாகஸங்களை எல்லாம் நேருக்கு நேர் நம்முடைய கண்களால் பார்த்து வியந்தோம். இந்த முகாம்களில் எத்தனையோ ராணுவ அதிகாரிகள் பத்திரிகையாளர்களை வந்து சந்தித்தனர். எல்லாருடைய பெயர்களும் இப்பொழுது நினைவில்லை. நினைவிலிருக்கும் சிலரை மட்டும் சொல்லுகிறேன்.

இவர்கள் எல்லாம் நமது சுதந்திரத்தைப் பாதுகாத்த உத்தமர்கள். பாரத தேசத்தின் எல்லையை இன்றும் பாதுகாத்து வரும் தீரர்கள். உலகில் உள்ள எந்த ராணுவத்துக்கும் இந்திய ராணுவம் சளைத்ததில்லை என்று உலகத்து ராணுவ மேதைகள் கண்டு வியக்கும்படி செய்த ராணுவ தளபதிகள். தங்கள் உயிரையும் திருணமாக மதித்து அழியாத வீர சாகசங்கள் செய்திருக்கும் அசகாய சூரர்கள். லெப்டினெண்ட் கர்னல் ஏ. கே. போஸ், லெப்டினட் கர்னல் காமா, பிரிகேடியர் திவான் பிரேம்சந்த், கர்னல் மெஹ்ரா, பிரிகேடியர் ஏ. எஸ். குரையா, லெப்டினெண்ட் கர்னல் ஜி. எஸ். ராணு, பிரிகேடியர் ஷேர் ஜம்தாபா—இவ்வாறு இன்னும் எத்தனை எத்தனையோ ராணுவ அதிகாரிகள்.

இந்த ராணுவ அதிகாரிகளை அவர்களின் முகாம்களிலேயே அவர்கள் பணியாற்றும் போதே பார்த்தோம். சிலரை அவர்கள் ஓய்வு பெற்று இருக்கும் முகாம்களில் சந்தித்தோம். அவர்களுடன் பேசியதிலிருந்தும், அவர்கள் சொன்ன விஷயங்களைக் கேட்டு அவர்களுடன் விவாதித்ததிலிருந்தும் பல அபூர்வமான உண்மைகளைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

ஜம்மு – காஷ்மீரில் இந்திய ராணுவத்துக்காகச் செலவு செய்வது அத்தனையும் இந்திய சுதந்திரத்தைக் காப்பாற்றும் செலவாகும். இந்தியாவின் தலைவாசலைப் பலப்படுத்தும் முயற்சியாகும். இந்த இடத்தை நாம் காப்பாற்றவில்லையானால் நமது தலைநகரான டில்லியைக் காப்பாற்ற முடியாது. இந்தியாவின் சுதந்திரத்தைப்பாதுகாக்க முடியாது. இந்தியாவுக்குள் எதிரிகள் புகும்வழி இதுதான். ஆகவே, இதைக் காப்பாற்றுவது, காப்பாற்றிப் பலப்படுத்துவது மிகவும் முக்கியமானது என்பதை ஜம்முவில் இருந்து பூஞ்ச் வரையில் செய்த யாத்திரையில் மிக நன்றாகத் தெரிந்து கொள்ள

முடிந்தது. இந்தியாவின் வடக்கு எல்லையைப் பாதுகாக்கும் மிகப் பெரிய அரணாக இமயமலை நிற்கிறது. ஆனால் அந்த இமயமலை இந்தியா வைக் காப்பாற்றுவதற்கு நாம் இமயமலையைக் காப்பாற்ற வேண்டும். அதை நம்முடைய ஆணைக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். அந்தக் காரியத்தைத்தான் நமது ராணுவம் ஜம்மு-காஷ்மீரில் செய்து வருகிறது.

சிறு பிரதேசங்களான ஜம்மு — காஷ்மீர் நம்மை விட்டுப் போனால்தான் என்ன! அதற் காக இத்தனை கோடி ரூபாயைச் செலவு செய்ய வேண்டுமா என்றெல்லாம் சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவர்கள் இந்தியாவின் பூகோள அமைப்பைத் தெரிந்து கொள்ளாத தால் அவ்வாறு சொல்லுகிறார்கள். ஜம்மு - காஷ்மீரைவிட இந்தியாவின் சுதந்திரம், அதன் ஜீவ நாடியான எல்லை மிகவும் முக்கியமல்லவா! எதிரிகளை இந்தியாவுக்குள் வராமல் தடுத்து நிறுத்த வேண்டுமென்றால் ஜம்மு-காஷ்மீரில் நிறுத்தினால்தான். அதை விட்டால் நாம் நமது தலைநகரான டில்லியை—அதாவது நமது சுதந் திரத்தைக் காப்பாற்ற முடியாது என்று அநுபவம் நிறைந்த ராணுவ அதிகாரிகள் கூறுகின்றனர். அவர்கள் கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை நேரில் பார்த்து நன்றாக உணர்ந்து கொள்ள முடிந்தது.

ஜம்மு-காஷ்மீர் யுத்தத்தில் ஈடுபட்டு வீரப் போர் நடத்திய ஒவ்வொரு ராணுவ தளபதி யைப் பற்றியும் அவர்கள் செய்த வீர சாக சங்களையும் விளக்க ஆரம்பித்தால், அவர்க ளுடைய தீரம் நிறைந்த வாழ்க்கையைக் கூற ஆரம்பித்தால் இந்தக் கட்டுரையை முடிக்கவே முடியாது. இமயமலையின் சிகரங்கள் போல எட்டிப் பிடிக்க முடியாதபடி நீண்டுகொண்டே போகும். ஆகையால் ஜம்மு-காஷ்மீர் ராணுவ முகாம்களைப் பற்றிய விஷயத்தை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

நாளையதினம் விமான மார்க்கமாகப் பூஞ்சி லிருந்து காஷ்மீரத்துக்குச் செல்வோம். உலகி லேயே மிக அழகிய இடமான காஷ்மீரத்துக்கு, பூலோக சுவர்க்கம் என்று உலகம் வியந்து, வியந்து புகழும் சௌந்தர்ய பூமிக்கு, அழகின் அற்புதங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து களி நடனமாடும் ஸ்ரீநகருக்குச் செல்வோம்.

### விமான யாத்திரை

சென்ற ஜூன் முப்பதாம் தேதி காலையில் பூஞ்சில் உள்ள ராணுவ விமான நிலையத்துக்கு வந்தோம். இதே போல முதல் நாள் காலை யிலும் வந்து விமானத்துக்காகக் காத்திருந் தோம். மழையும் மப்புமாக இருந்ததால் விமானம் ஸ்ரீநகரில் இருந்து பனிகால்கரம் வரையில் வந்து அதற்கு மேல் வர முடியாமல் திரும்பிப் போய்விட்டது. இன்றும் மழையும் மப்புமாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் நேற்றுப் போல் இல்லை. விமானம் வந்துவிடும் என்று ராணுவ அதிகாரிகள் சொன்னார்கள். முதல் நாள்போல ஏமாற்றாமல் இன்று உண் மையிலேயே விமானம் வந்து விட்டது.

இரண்டு இன்ஜின்கள் கொண்ட விமானப் படைக்குச் சொந்தமான வெள்ளை டக் கோட்டா விமானம். இந்திய விமானப் படை யைச் சேர்ந்த விங் கமாண்டர் ஜோஷியே

விமானத்தை ஓட்டி வந்தார். சாதாரணமாக இதர இடங்களில் விமானம் ஓட்டுவதற்கும் இமயமலையின் மீது தாண்டிப் பறப்பதற்கும் அதிக வித்தியாசம் இருக்கிறது. இமயமலையின் பனி மூடிய சிகரங்களுக்கும் மேக மண்டலத்துக்கும் அதிகமான வித்தியாசம் தெரியாது. விமானம் செங்குத்தாகப் பதினாயிரம் அடி உயரக் கிளம்பிச் செங்குத்தாகக் கீழே இறங்க வேண்டும். இதற்கு மிகுந்த பயிற்சி பெற்ற விமான ஓட்டியாகவும், இந்த இடங்களில் அடிக்கடி விமானம் ஓட்டிப் பழக்கப்பட்டவராகவும் இருக்க வேண்டும். அதிலும் அகில இந்தியாவிலும் இருந்து வந்திருக்கும் பத்திரிகையாளர்கள் அல்லவா இந்த இடத்தில் யாத்திரை செய்யப் போகிறார்கள். அதனால் தான் விங் கமாண்டர் ஜோஷியே விமானத்தை ஓட்டிக் கொண்டு வந்தார்.

ஒருநாள் முழுவதும் எதிர்பார்த்த விமானம் வந்து விட்டதும் பத்திரிகையாளர்களுக் கெல்லாம் ஒரே உற்சாகம்.

"விமானம் வந்து விட்டது ஏறிக் கொள்ளலாம் அல்லவா!" என்று அவசரப்பட்டார் ஒரு பத்திரிகையாளர். அவருக்குக் காஷ்மீரத்துக்குள் போவதற்கு அவ்வளவு அவசரம்.

" இதில் ஒரு கை எழுத்துப் போட்டுவிட்டுப் பிறகு விமானத்தில் ஏறிக் கொள்ளலாம்" என்றார் ராணுவ அதிகாரி.

" அது என்ன !"

"படித்துப் பாருங்கள். தெரிந்து கொள்ளலாம்" என்றார் அதிகாரி.

படித்துப் பார்த்தோம். "இந்த விமான யாத்திரையில் உயிருக்கு அபாயம் ஏற்பட்டால் அதற்கு இந்தியராணுவம் பொறுப்பாளியில்லை" என்று எழுதப்பட்டிருந்தது. அதில் எல்லாப் பத்திரிகையாளர்களிடமும் ஒரு கை எழுத்து வாங்கிக் கொண்டார்கள். இந்த மரணப் பத்திரம் கை எழுத்துப் படலம் முடிந்தவுடன் விங் கமாண்டர் ஜோஷி எல்லாப் பத்திரிகையாளர்களையும் கூப்பிட்டார்.

தம் கையிலிருந்த பாரசூட்டைக் காண்பித்தார். அதை எப்படி அணிந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி எல்லாம் விளக்கினார். பிறகு ஒவ்வொரு பத்திரிகையாளருக்கும் ஒரு பாரசூட்டைக் கட்டி விட்டார்.

"விமானம் பறக்கும்போது அதற்கு ஏதாவது அபாயம் நேர்ந்தால் உங்களுக்கு உடனே அறிவிக்கப்படும். அப்பொழுது நீங்கள் எல்லாரும் எந்தவித யோசனையும் செய்யாமல் உடனே விமானத்திலிருந்து குதித்து விட வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

இந்த பாரசூட் அணியும் பயிற்சியைப் பத்திரிகையாளர் எல்லாரும் பெறுவதற்குள் ஒரு மணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டது. இது முடிந்தவுடன் எல்லாருடைய உடல் கனத்தையும் நிறுத்துப் பார்த்துக் கணக்கெடுத்துக் கொண்டார்கள். இந்த மாதிரி விமானம் கிளம்புவதற்கு வேண்டிய தவிர்க்க முடியாத பல சடங்குகள் எல்லாம் முடிந்த பின்னர் எல்லாரும் விமானத்துக்குள் ஏறினோம்.

இது ராணுவ விமானம் ஆனதால் இதற்குள் சுகமான ஆசனங்கள் இல்லை. சாதாரணமாக, சென்னையில் இருந்து பம்பாய்க்கும் டில்லிக்கும் செல்லும் விமானங்களில் இருப்பது போல் உட்கார்ந்து கொள்வதற்கு மெத்தை தைத்த ஆசன வசதிகள் கிடையா. ராணுவ வீரர்கள் பிரயாணம் செய்யும் விமானம் ஆயிற்றே! அவர்கள் சுகத்தை எதிர்பார்க்க முடியுமா! விமானத்துக்குள் இருபுறத்திலும் அலுமினிய பெஞ்சு இருந்தது. அதில் ஒவ்வொருவரும் உட்காருவதற்கு வசதி யிருந்தது. அந்த அலுமினிய பெஞ்சில் பத்திரிகையாளர்கள் உட்கார்ந்தவுடன் அந்த பெஞ்சில் இருந்த பெல்டால் எல்லாரையும் கட்டினார்கள்.

இந்தப் பூர்வாங்கக் காரியங்கள் எல்லாம் முடிந்தவுடன் விமானத்தின் இன்ஜின் ஒருதரம் பயங்கரமாக அலறியது. அடுத்த கணம் பூமியில் ஓட ஆரம்பித்தது. பிறகு விமான நிலயத்தில் உள்ள நீண்ட நெடுஞ் சாலையில் வேகமாக ஓடி உயரப் பறக்க ஆரம்பித்தது. விமானம் பூமியில் இருந்து உயரக் கிளம்பியதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. " இதோ விமானம் உயரக் கிளம்பி விட்டது!" என்று விமான ஓட்டி சொன்னதும்தான் அதைப் புரிந்துகொள்ள முடிந்தது.

விமானத்திலிருந்தபடி இமயமலையின் வெள்ளிப் பனி மூடிய சிகரங்களையும், கற்பனையிலே காவியத்திலே காண முடியாத எழில்மிக்க காஷ்மீரத்தின் கண் கவர் காட்சிகளையும் அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)

# இப் புதிய
# 'கேவாபாக்ஸ்'
## சிறிய தொகைக்கு மிகச் சிறந்தது






ரூ. 29/-

இப் புதிய 'கேவாபாக்ஸ்' மிக அழகான சிறிய காமிரா. வளைவான மூலைகளுடன் கூடிய உலோக பெட்டி......நேர்த்தியான ரெக்ஸைன் லேபிளிங்...... பளபளப்பான உறுப்புகள்......அழகான வியூபைண்டர்......இவை யாவுமே இப் புதிய கேவாபாக்ஸ் காமிராவுக்கு பெருமிதமான தோற்றத்தை அளிக்கிறது. ஆனாலும் இதன் விலை ரூ. 29/-தான்.

விசேஷ அம்சங்கள் :

- ஷட்டர் மூன்றுவித வேகத்தில் இயங்குகிறது. B, 1/50, 1/100. ஷட்டரின்மேல் ஒரு கேபிள் ரிலீஸ் சாக்கெட்டும், ஒரு ஸ்டாண்டர்ட் பிளாஷ் காண்டாக்டும் பொருத்தப்பட்டுள்ளன.
- எவ்வித பிளாஷும் இக் காமிராவுக்குப் பொருந்தும்.
- பக்கவாட்டிலுள்ள ஒரு சாதாரண கொக்கியை திருப்பி வெகு சுலபமாக இக் காமிராவை திறக்கலாம், மூடலாம்.
- பிலிமை கெட்டியாக சுற்றும் குமிழ் பிடிப்பான கோடுகளுடன் கூடியதால் பிலிமை வேகமாகச் சுற்ற உதவுகிறது.
- பிலிம் எண்களை காட்டும் விண்டோ பழுது அடையாதவாறு மூடியால் பாதுகாக்கப் படுகிறது.

உங்கள் கேவாபாக்ஸ் காமிராவுக்கு கேவாபான் 33° அல்லது 36° பிலிமை உபயோகியுங்கள்.

**'GEVABOX'**

**Allied Photographics Limited**

அலைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய் - 1

---

*பிரதி வியாழன் இரவு 8 மணிக்கு ரேடியோ சிலோனில் (41 மீட்டர் பாண்டில்) ஏபி எல் ஸ்தாபனத்தாரின் போட்டோ - மேளா (PHOTO - MELA) என்ற நிகழ்ச்சியைக் கேளுங்கள்.*

# இப்படியும் நடக்குமா?

## சாவி

[ ஆயுள் இன்ஷூரென்ஸ் கம்பெனிகளை இந்திய சர்க்கார் தேசிய சொத்தாக்கி நிர்வாகத்தை மேற்கொண்டிருப்பதால் இனி காரியங்கள் இப்படியும் நடக்குமோ என்று பலமான சந்தேகங்கள் உலாவ ஆரம்பித்திருக்கின்றன.]

பார்வதி அம்மாள்
.........தெரு: சென்னை.

இன்ஷூரென்ஸ் இலாகா மந்திரி அவர்களுக்கு,
புது டில்லி

கனம் பொருந்திய ஐயா,

இன்ஷூரென்ஸ் நிர்வாகத்தைச் சர்க்கார் ஏற்று நடத்துவதாக அறிந்து இக் கடிதம் எழுதுகிறேன். என் கணவர் பரமேசுவரன் சமீபத்தில் உத்தியோகம் தேடுவதற்காகப் புது டில்லிக்கு வந்திருந்தார். அவருக்கு உத்தியோகம் கிட்டவில்லை. அதற்குப் பதிலாக மஞ்சள் காமாலைதான் கிட்டியது. மேற்படி வியாதியின் காரணமாக



அவர் சென்னைக்குத் திரும்பி வந்த பத்து தினங்களுக்கெல்லாம் இறந்து விட்டார். நான் இப்போது இந்த உலகத்தில் ஓர் ஏழை அனாதை. எனக்கு ஏழு குழந்தைகள் இருக்கின்றனர்.

துரதிருஷ்டத்தில் ஒரு சின்ன அதிருஷ்டமும் எனக்கு இருப்பதாக எண்ணுகிறேன். என் கணவர் 'பிராணபய' ஆயுள் இன்ஷூரென்ஸ் கம்பெனியில் தம்முடைய ஆயுளை இன்ஷூர் செய்திருந்தார். இது வரை பாலிஸிக் கட்டணத்தையும் தவறாமல் செலுத்தி வந்தார். அந்தப் பாலிஸியின் மூலம் எனக்குச் சேர வேண்டிய ரூபாய் 5567-ஐ உடனடியாக அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தால் பரதவிக்கும் ஓர் ஏழைக் குடும்பத்தைக் காப்பாற்றிய பெரும் புண்ணியத்தை இந்தக் காருண்ய சர்க்கார் கட்டிக் கொள்ளும்.

இப்படிக்கு,
அனாதை பார்வதியின்
இடது கட்டைவிரல் ரேகை

* * *

இன்ஷூரென்ஸ் இலாகா மந்திரி காரியாலயம்
புது டில்லி

பார்வதி அம்மாளுக்கு,

அம்மணி!

தங்கள்...தேதியிட்ட கடிதம் கிடைத்தது. தங்களுக்கு எந்த வருஷத்தில் கலியாணம் ஆயிற்று! எந்தெந்த வருஷங்களில் குழந்தைகள் பிறந்தன! அவர்களுடைய வயது விவரம்! சென்ஸஸ் கணக்கில் அவர்களுடைய பெயர்கள் பதிவாயிருக்கின்றனவா! தங்கள் விவாக சமயத்தில் எடுத்த போட்டோ இருக்கிறதா! தங்களுக்குக் கையெழுத்துப் போடத் தெரியாது என்பதற்குச் சாட்சி! இவ்வளவு விவரங்களையும் தெரிவிக்க வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
பிரதம காரியதரிசி

குறிப்பு:– தாங்கள் கைரேகைப் பரீட்சை அதிகாரி முன்பு ஆஜராகித் தங்கள் கைரேகையைப் பரீட்சை செய்து அதற்கான அத்தாட்சியும் அனுப்ப வேண்டும்.

* * *

பார்வதி அம்மாள்,
சென்னை.

ஐயா,

தாங்கள் கேட்ட விவரங்கள் யாவும் சேகரித்து அனுப்பக் குறைந்தது மூன்று மாத காலமாவது ஆகும். அது வரையில் என்னால் தாங்க முடியாது. குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் கட்ட வேண்டும். ஆகவே, எனக்கு உடனே கொஞ்சமாவது பணம் அனுப்பி வையுங்கள். என்னிடம் கலியாண போட்டோ கிடையாது. அப்படி ஒன்று எடுக்கவேயில்லை.

இப்படிக்கு,
(கைரேகை) பார்வதி

* * *

சர்க்கார் இன்ஷூரென்ஸ் இலாகா
புது டில்லி

அம்மணி!

தங்கள் கடிதம் கிடைத்தது. இது சர்க்கார் விஷயம். எல்லா விஷயங்களும் திருப்திகரமாகத் தெரிந்த பிறகுதான் பணம் அனுப்ப ஏற்பாடு செய்யப்படும். முன்பணம்கொடுப்பது இயலாத காரியம். தாங்கள் வருமான வரி நிலவரி கட்டிவிட்டீர்களா என்பதையும் தெரிவிக்கவும். உங்கள் புருஷன் மஞ்சள் காமாலையால்தான் இறந்தார் என்பதற்கு அத்தாட்சி வைத்திருக்கிறீர்களா! போட்டோ இல்லையென்றால் கலியாண முகூர்த்த அழைப்பிதழாவது அனுப்பி வையுங்கள்.




இப்படிக்கு,
பிரதம காரியதரிசி, இன்ஷூரென்ஸ் இலாகா

பார்வதி அம்மாள்
சென்னை

ஐயா,

கலியாணமாகிக் கணவனும் காலமாகி விட்டார். இப்போது போய்க் கலியாண அழைப்பு இதழ் அனுப்பச் சொல்கிறீர்கள். நல்ல வயிற்றெரிச்சல் இது! என்னால் குழந்தை களை வைத்துக் கொண்டு காலம் தள்ள முடிய வில்லை. ரொம்பச் சோதிக்காதீர்கள்!

இப்படிக்கு,
(கைரேகை) பார்வதி

* * *

## சர்க்கார் கெஜட்

சென்னையைச் சேர்ந்த பரமேசுவரன் என்பவர் 'ஜாண்டிஸ்' என்னும் மஞ்சள் காமாலை வியாதியால் இறந்து விட்டதாகத் தெரிகிறது. சர்க்கார் இலாகா எதற்காவது அவர் வரி செலுத்த வேண்டியிருந்தால், இன்ஷூரென்ஸ் இலாகாவுக்குத் தெரியப் படுத்தக் கோரப்படுகிறது.

* * *

## டில்லி லோக சபையில்

ஒரு அங்கத்தினர்:—சென்னை பரமேசுவரன் என்பவர் டில்லி வந்ததும் பிறகு அவர் மஞ்சள் காமாலையால் இறந்து போனதையும் சுகாதார மந்திரி அறிவாரா!

சுகாதார மந்திரி:— தெரியும்.

அங்கத்தினர்:— அப்படியானால் மஞ்சள் காமாலை சென்னையிலிருந்து டில்லிக்குப் பரவி யதா! அல்லது டில்லியிலிருந்து சென்னைக்குப் பரவியதா! மரணமடைந்தவருக்கு ஏற்கனவே மஞ்சள் 'காமாலை' நோய் இருந்ததா என்ப தைக் கனம் மந்திரி தெரிவிப்பாரா!

மந்திரி:— இது விஷயம் விசாரணையில் இருந்து வருகிறது. தயவுசெய்து கனம் அங்கத் தினர் இது விஷயத்தில் சற்று அவகாசம் அளிக்க வேண்டும்.

* * *

சர்க்கார் இன்ஷூரென்ஸ் இலாகா
புது டில்லி.

பார்வதி அம்மாளுக்கு,

அம்மணி,

தங்கள்.........தேதி கடிதம் கிடைத்தது. தங்களுடைய கணவருடைய பெயர் ஜனன ரிஜிஸ்தரில் இருக்கிறதா! அப்படி இருந்தால் அவர் எந்த ஊரில் எப்போது பிறந்தார் என்பது தெரிய வேண்டும்.

இப்படிக்கு,
பிரதம காரியதரிசி.

குறிப்பு:- இதற்கு முன் தங்கள் கணவருக்கு எப்போதாவது மஞ்சள் காமாலை வந்த துண்டா! அவர் டில்லிக்குப் புறப்படும்போது கண் மஞ்சளாக இருந்ததா!

* * *

வருஷங்கள் ஓடி மறைகின்றன. பார்வதி அம்மாள்- சர்க்கார் கடிதப் போக்குவரத்துக்கு ஒரு முடிவே ஏற்படவில்லை. இதற்குள் அந்த அம்மாள் வறுமை தாங்காமல், துயரம் தாங் காமல் ஏழு குழந்தைகளுடன் என்ன ஆனாள் என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை.

பார்வதி அம்மாள் என்ற ஒரு 'நபர்' எங்கு இருக்கிறார் என்று தேடித் தேடி இன்ஷ்யூ ரென்ஸ் பணத்தோடு தபால்காரர் நாளது தேதி வரை அலைந்து திரிகிறார் என்று கேள்வி.

(சங்கர்ஸ் வீக்லி — தழுவல்)

## சென்னையில் தியாகப்பிரும்ம உற்சவம்!



சென்னை ஸ்ரீ தியாகப்பிரும்ம சங்கீத சபையின் ஆதரவில் மார்ச்சு 1வ. முதல் 5வ. வரை தியாகப் பிரும்ம உற்சவம் நடைபெற்றது. ஐந்தாம் தேதி இரவு தியாகப்பிரும்மத் திரு உருவப் படத்தை அலங்கரித்த புஷ்ப விமானத்தில் வைத்து ஊர்வலம் விட்டார்கள். ஊர்வலத்தில் சென்னையில் உள்ள பிரபல நாகஸ்வர கோஷ்டியினர் அத்தனை பேரும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.



# டுமெக்ஸ்

## பால் உணவு



குழந்தைகளால் அவர்கள் ஏன் டுமெக்ஸ் பால் உணவை விரும்புகிருர்கள் என்று சொல்லமுடியாது. ஆனல் அது கிடைத்ததும் அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிருர்கள் என்பதைக் கவனியுங்கள். இதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை, ஏனென்ருல் டுமெக்ஸ் தான் தாய்ப்பாலுக்கு அடுத்த சிறந்த பால் உணவாக விளங்குகிறது.

**உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்**

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 19

சத்தியம் என்பது பல கிளைகள் கொண்ட மரம். வாய்மை மட்டும் அல்ல சத்தியம். எண்ணத்திலும் உண்மை வேண்டும். உண்மை என்பது பௌதிக உலகத்தில் நாம் வைத்துக் கொண்டிருக்கும் உண்மை மட்டும் அல்ல; பேருண்மை. மெய்ப்பொருள் என்கிற பேருண்மை. அதாவது கடவுளே யாகும். கடவுளுக்குக் குணங்களும் இலக்கணங்களும் ஆயிரக் கணக்கில் சொல்கிறார்கள். அவை அனைத்தும் என் மனத்தைக் கவர்ந்தாலும் சத்தியம் ஒன்றே நான் வழிபடும் மூர்த்தி. அந்த மூர்த்தியை நான் இன்னும் முற்றிலும் காணவில்லை. காண முயன்று வருகிறேன். அதற்காக வேறு எதையும் பொருட்படுத்தாமல் இழந்துவிடச் சம்மதப்படுவேன் — உயிரும் உள்பட! இதற்கு வேண்டிய உறுதியை ஆண்டவன் அருள்வானாக! பூரண உண்மையைக் காணும் வரையில் நான் கண்ட உண்மையே உண்மையென்று கருதிக் கடமைகளைச் செய்துகொண்டு போக வேண்டும். சம்பூரண உண்மையைக் காணும் வரையில் ஔபாதிக உண்மைதான் எனக்கு வழிகாட்டும் தீபமாகும். அதுவே என் யுத்தங்களில் கத்தியும் கேடயமும் ஆகும். அதுவே என் நடை பாதை. இந்தப் பாதை கத்தி முனையைப் போன்றது. இந்த ஒடுக்கமான பாதையே நான் கண்ட பாதைகளில் தாமதமும் தவறுமின்றி ஊர் போய்ச் சேரும் பாதை. பிழை பலவாயினும், இமயம் போன்று பெரிதாயினும் நேர் வழியில் போகும் வரையில் எனக்கு அது சிறிதாகவே படும். குற்றத்தின் கேடின்றித் தப்பும் வழி அதிலேதான் உண்டு. யாத்திரை தடைபடுவதில்லை. இப்படி நேர் வழியில் செல்லும் யாத்திரையில் சம்பூரண உண்மையே மெய்ப்பொருளே ஒவ்வொரு சமயம் காட்சியும் தந்திருக்கிறது. மெய்ப்பொருள் ஒன்றே உண்மை. மற்றதனைத்தும் பொய் என்பதை இந்த யாத்திரையில் கண்டு கொண்டு வருகிறேன்.

இன்னும் ஒன்று கண்டு வருகிறேன். நான் செய்வதைச் சிறு குழந்தையும் செய்யக் கூடும். உண்மைப் பயிற்சிக்கு வேண்டிய கருவிகள் மிக எளியவை. அகங்காரிகளுக்கு அந்தக் கருவிகள் மிகக் கஷ்டம். குற்றம் அறியாத குழந்தைக்கு மிகச் சுலபம். உண்மையை நாடுகிறவனுக்குக் கர்வம் கூடாது. தன்னைத் தூசிக்குச் சமானமாகப் பாவிக்க வேண்டும். தூசியைக் காலில் துவைத்து உலகம் நடக்கிறது. ஆனால் உண்மையைக் காதலிப்பவன், அந்தத் தூசியின் கீழ்த் துவைபட்டு நிற்கும் தூசியாகத் தன்னைக் கருத வேண்டும். அப்போதுதான் மெய்ப்பொருள் நமக்குக் காட்சி தரும்.

[சுய சரிதம்]

### ராஜாஜி

கடவுளைப் பகுத்தறிவைக் கொண்டு காண முடியாது. வாதித்துக் காண முடியாது. பக்தியினால் தான் காண முடியும். கண்ட பின்னுங் கூட பக்தியைக் கொண்டு தான் காட்சியை நிறுத்திக் கொள்ள முடியும். சிருஷ்டி அமைப்பில் வேறு மார்க்கம் இல்லை. நமக்கு இட்ட வரம்பை நாம் எப்படித் தாண்ட முடியும்! இந்த தேகத்தில்

நிற்கும் வரையில் முழுக் காட்சி முடியாத காரியம். முழுக் காட்சி நமக்கு என்னத்திற்கு! அதைக் கொண்டு என்ன செய்வோம். நான் அடையக் கூடும் மேன்மையை உண்மை பக்தியைக் கொண்டே அடைய முடியும். நேரில் கண்டு முழுக் காட்சி அடைந்து அதற்குமேல் நாம் அடையக்கூடியது வேறு ஏதும் இல்லை. நமக்கு வெளியேயா கடவுள் இருப்பது. வெளியே இருப்பதற்கு அல்லவோ கண் பயன்படும். பார்ப்பவனுக்கு உள்ளேயே இருப்பதை முற்றிலும் அவன் எப்படிக் கண்ணால் காண முடியும். இந்திரியங்களினால் அவனைக் காண முயல்வது வீண். உயிரைக் காண்பது உணர்ச்சி ஒன்றே. அவனைக் காண்பதும் அவ்வழியே. இந்திரியங்களை இழுத்து உள்ளடக்கினால்தான் அவனைப்பற்றிய உணர்வு பெறுவோம். வெளியே நிகழும் இரைச்சல்களினால் உள்ளே ஒலிக்கும் சின்ன மேளம் நம் காதில் கேட்கவில்லை. அந்த உன்னத வாத்தியம் நிற்காமல் இசைத்துக் கொண்டேதான் இருக்கிறது. நாம் காதால் கேட்கும் வாத்தியங்கள் அந்த இசைக்குச் சமானம் அல்ல. ஆனால் இரைச்சலை நிறுத்த வேண்டும். ஆண்டவன் வடிவெடுத்து நம்முன் நிற்க மாட்டான். பேராபத்துக்களின்று தப்புகிறோமே அந்த நிகழ்ச்சிகளின் வழியாகத்தான் தன்னைக் காட்டுகிறான்.

[ஹரிஜன் 13—6—36]

சத்தியமே தெய்வம் என்று சொல்லி வருகிறேன். நான் சத்தியத்தின் வழியாகக் கண்டது பரம்பொருளின் பூரண ஜோதியல்ல. ஓரளவேதான். அதுவே சதகோடி சூரிய ஒளியாகும். இந்த சத்திய மார்க்கம் அகிம்ஸை வழியாகத்தான் கடைப்பிடிக்க முடியும் என்பதை என்னுடைய சோதனைகள் அனைத்தும் ஊர்ஜிதம் செய்துள்ளன.

[யங் இந்தியா 7—2—29]

## பம்பாய் ராஜ்யத்தில் ஒரு தமிழர்

பம்பாய் ராஜ்யத்தில் சுகாதார டைரக்டராக இருந்த டாக்டர் டி.கே. விசுவநாதன் சமீபத்தில் தமது பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். இவர் இளமையிலேயே சென்னை சர்வகலாசாலை வைத்தியப் பரீட்சையில் முதல் மாணவராகத் தேறி, சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்தார். பிறகு அமெரிக்காவுக்குச் சென்று பொதுஜன சுகாதாரப் பரீட்சையில் முதல்தரமாகத் தேறித் தங்கச் சாவியைப் பரிசு பெற்றார். சென்ற யுத்தத்தின்போது அஸ்ஸாமிலும் சென்னையிலும் பணியாற்றினார். அஸ்ஸாமில் இந்திய–பர்மா சாலை போடும்போது மலேரியா நோயினால் இந்தியச் சிப்பாய்கள் பெருங் கஷ்டங்களுக்கு உள்ளானார்கள். அந்த மலேரியா நோயைத் தடுக்கும் பணி இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. பின்னர் பம்பாய் ராஜ்யத்தில் சுகாதார டைரக்டர் பதவி ஏற்று, டி. டி. டி. என்னும் கிருமிநாசினியை ராஜ்யம் பூராவிலும் எல்லாக் கிராமங்களிலும் தெளிக்கச் செய்து, பல இடங்களில் மலேரியா நோயே இல்லாமல் செய்தார். மற்ற இடங்களில் மலேரியா நோயினால் பாதிக்கப்படுவோரின் தொகை மிகப் பெருமளவு குறைந்து விட்டது. இவை தவிர, பன்முறை மேல் நாடுகளிலும் கீழ் நாடுகளிலும் நடைபெற்ற சுகாதார மகாநாடுகளில் கலந்து கொண்டிருக்கிறார். உலக சுகாதார சங்கத்தின் வைத்திய நிபுணர் குழுவில் இருக்கிறார். இந்திய வைத்திய ஆராய்ச்சிக் குழுவிலிருக்கிறார். சமீபத்தில் டில்லியில் மஞ்சள்காமாலை ஏற்பட்டதின் காரணத்தை ஆராய நியமிக்கப்பட்ட கமிட்டியில் பணியாற்றினார். டாக்டர் விசுவநாதன் வைத்தியத் துறையில் மட்டுமன்றி, புனா சரஸ்வதி வித்தியாலய யூனியனுக்குத் தலைவராக இருந்து, தமிழ் மாணவ மாணவிகள் உயர்தரப் படிப்புப் பெற வசதியும் செய்து கொடுத்திருக்கிறார். அந்தப் பள்ளிக்கூடத்துக்கு இரண்டு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள கட்டடமும் ஏற்படுத்திக் கொடுத்த பெருமை டாக்டர் விசுவநாதனையே சாரும். தமிழர்கள் எங்கெங்கிருந்தாலும், அவர்கள் அப்பகுதியிலுள்ள மக்களுக்கு நல்ல சேவை செய்வதுடன் தமிழ்நாட்டுக்கும் பெருமையைத் தேடித் தருகின்றனர் என்பதை மீண்டும் நிரூபித்து விட்டார் டாக்டர் விசுவநாதன்.



# கால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

## வீரிய குளோரோபிலின் பூரணநன்மைகளை




## வீரியகுளோரோபில்தான் உங்களுக்கு நன்மை தரவல்லது!

வாயில்தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்கு புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தையாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப்படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளைப் பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTF/6/3

கல்கியின்

# அமர தாரா



ஆனந்த்

அத்தியாயம் 3

## அறிமுகம்

ஒரு நாள் கல்கத்தாவில் நான் அரவிந்துடன் தங்கி யிருந்தபோது இன்னொரு ஐ. ஸி. எஸ். காரர் வீட்டில் விருந்து நடந்தது. அதற்கு என்னையும் அழைத்திருந்தார்கள். அரவிந்த், உமா, நான் மூவரும் அதற்குச் சென்றோம்.

அன்றைய விருந்துக்கு எத்தனையோ பிரமுகர்கள் வந்திருந்தார்கள். மேல் நாட்டு முறையில் மேஜையின்மீதுதான் சாப்பாடு. அறிமுகப் படலங்கள் ஆன பிறகு நான் ஒரு இடத்தில் உட்கார்ந்து கொண்டேன். சற்றைக் கெல்லாம் எனக்கு அடுத்த நாற்காலியில் ஒரு நவ நாகரிகப் பெண்மணி வந்து உட்கார்ந்தாள். எதிர்ப் பக்கத்திலிருந்து உமா அவளைப் பார்த்துச் சிரித்தாள். "செளக்கியமா?" என்று வங்காளியில் கேட்டாள். பிறகு என்னைப் பார்த்து, "மிஸ்டர் ராய்! உங்களருகில் உட்கார்ந்திருப்பவர் ஸ்ரீமதி சுலோசனா" என்று அவளை அறிமுகம் செய்து வைத்து விட்டு, என்னையும் யாரென்று அவளுக்குத் தெரியப்படுத்தினாள்.

உடனே அந்தச் சுலோசனா திரும்பி என்னைப் பார்த்து, "நமஸ்காரம்! உங்களைச் சந்தித்ததில் மிக சந்தோஷம்" என்று கூறினாள்.

இந்த மாதிரியான உபசாரப் பேச்சுக்கள் எனக்கு ரொம்ப வழக்கமாகிப் போயிருந்தன. உள்ளத்தில் ஈரப் பசையே இல்லாமல், 'செளக்கியமா', 'சந்தோஷம்', 'அன்பு' என்றெல்லாம் உதடுகளில் இனிமையாகப் பேசுவதைக் கண்டால் எனக்கு அருவருப்பாக இருக்கும். அதை ஓரளவுக்கு நானே பிரயோகம் செய்ய வேண்டி நேர்ந்தபோதெல்லாம் ரொம்ப வேதனைப் படுவேன். பழகிப்போன பிறகு அந்த அர்த்தமில்லாத வார்த்தைகள் என்னை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. நானும் "வந்தனம்" என்று கூறி விட்டு மேலே பேசாமல் சாப்பிடுவதற்கு ஆரம்பித்தேன்.

"ரொம்பக் கவனமாகச் சாப்பிடுகிறீர்களே" என்ற குரல் கேட்டு ஒரு கணம் திகைத்துப் போனேன். அவ்வளவு சுதந்திரமாகச் சுலோசனா பேசியது எனக்கு வியப்பை யளித்தது.

"சமையல் நன்றாக இருக்கிறது" என்றேன்.

"உங்களுக்கு எந்த ஊர்?"

"நாராயண் கஞ்ச்" என்றேன். அப்படி ஏன் அப்பொழுது ஒரு பொய் சொன்னேன் என்று இன்னும் எனக்குப் புரியவில்லை. நமது மனத்தின் இயல்பே நமக்குச் சில சமயம் விளங்குவதில்லை, அல்லவா?

"நீங்கள் யுத்தம் உக்ரமாக நடந்த சமயத்தில் லண்டனில் இருந்தீர்களாமே?" என்று கேட்டாள்.

"ஆம்! யார் கூறினார்கள்?"

"அரவிந்த் சற்று முன்னால் என் சகோதரரிடம் அதைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தார்."

"அப்படியா? சகோதரர் யார்?"

"அதோ நீலச் சட்டை போட்டுக் கொண்டிருக்கிறாரே, அவருக்கு வலது பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர் தான் என் அண்ணா ரமேஷ்!" என்று கூறினாள் சுலோசனா.

ரமேஷைப் பார்த்ததுமே எனக்கு அவன் மீது ஒரு நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டது. அவனுடைய சாந்தமான ஆனால் உறுதி தவழ்ந்த முகம் என்னை மிகவும் கவர்ந்தது.

"சாப்பாடு ஆன பிறகு உங்களுக்கு அவரை அறிமுகம் செய்து வைக்கிறேன்" என்றாள் சுலோசனா.

அதற்கு மேல் மறுபடியும் பேசாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

பிறகு எல்லோரும் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த போது ரமேஷை அழைத்து, "இவர் தான் மிஸ்டர் ராய்! சற்று முன்னால் அரவிந்த் உன்னிடம் சொன்னாரே அவர்" என்றாள்.

"அரவிந்த் உங்களைப் பற்றி ரொம்பப் புகழ்ந்து கூறினான்" என்று என் கையைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே கூறினான் ரமேஷ்.

அன்று வீடு திரும்புவதற்குள் நானும் ரமேஷும் நண்பர்களாகி விட்டோம். தங்கள் வீட்டுக்கு வரவேண்டும் என்று அவன் என்னை வற்புறுத்தினான். நான் சாந்திபூருக்குச் செல்லுமுன்னால் கட்டாயம் வருவதாகக் கூறினேன்.



அன்று காரில் வீடு திரும்பியபொழுது நான் அரவிந்திடம், "என்ன அரவிந்த், நீ என்னைப் பற்றிப் புகழ்ந்தாயாமே. அப்படி என்னப்பா அவர்களிடம் கூறினாய்?" என்று கேட்டேன்.

"நான் ஒன்றும் புகழவில்லை. நீ ரொம்பக் கெட்டிக்காரன், ரொம்பப் பண்பாடு உடையவன் என்றுதான் அவர்களிடம் சொன்னேன்."

"கூலோசனிடம் நான் பிறந்த இடம் 'நாராயண் கஞ்ச்' என்று கூறி வைத்தேன். அவன் நம்பி விட்டான். அப்படி ஒரு ஊர் இந்த வங்காளத்தில் இருக்கிறதா இல்லையா என்று கூட எனக்குத் தெரியாது."

உமா கலகலவென்று சிரித்து விட்டு, "நீங்கள்கூட இப்படியெல்லாம் பேச ஆரம்பித்து விட்டீர்களா? இதுவரை உங்களுக்கு மறைத்துப் பேசுவதற்கெல்லாம் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருந்தேனே!" என்றாள்.

அரவிந்த் உமாவிடம், "உமா! ரங்கதுரை ரொம்ப நல்லவன்தான். அவனுக்கு யார் யாரிடம் எப்படிப் பழக வேண்டும் என்றெல்லாம் நன்றாகத் தெரியும். ஆனாலும் அதை அவனுடைய பெருந்தன்மையினால் உபயோகிப்பதில்லை. அவ்வளவுதான்" என்றான்.

"இருந்தாலும் அவர் இன்று கூலோசனிடம் இப்படி ஒரு பொய் சொல்லி இருக்கக் கூடாது. நான் உடைத்து விடுகிறேன், பாருங்கள்."

"வேண்டாம். தயவு செய்து சொல்ல வேண்டாம். எனக்குக் கொஞ்ச நாள் ஒரு வங்காளியாகவே இருக்க ஆசையாக இருக்கிறது! நீங்கள்தான் நான் பேசுவதிலிருந்து யாரும் என்னை வங்காளி இல்லையென்று கூறவே முடியாது என்று கூறு



கிறீர்களே. இப்படித்தான் சில நாட்கள் இருக்கட்டுமே? என்ன ஆகிறதென்று பார்ப்போம். உங்கள் இருவரையும் தவிர இங்கே யாருக்குமே நான் என்ன மாகாணத்தைச் சேர்ந்தவன் என்று தெரியாது. நான் கூறியதும் இல்லை. யாரும் கேட்டதும் இல்லை. இது வேடிக்கைதானே?'' என்றேன்.

உமா அரவிந்த் இருவரும் அதை ஆமோதித்தார்கள்.

உமா திடீரென்று, "சுலோசனா ரொம்ப அழகாக இல்லையா?'' என்று என்னிடம் கேட்டாள்.

"எனக்கு அழகைப் பற்றி என்ன தெரியும்?''

"ஆஹா! இப்படிச் சொன்னால் நம்பி விடுவார்களாக்கும்? தாகூரின் கவிதைகளைப் படித்து ரஸிப்பவருக்கு அழகு தெரியாமல் போய் விடுமோ?''

"ஹரே ராம்! நீங்கள் தாகூரின் இனிமையான கவிதைகளைச் சுலோசனாவுக்கு ஒப்பிடுகிறீர்களா?''

"ஏன் உமா! நீ ஏன் இப்படித் தாகூரின் கவிதைகளைக் கரிக்கிறாய்?''



உமாவுக்குக் கோபம் வந்து விட்டது. "இந்த ஆண்களே இப்படித்தான். ஒரு பெண்ணைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் ஒன்று அளவில்லாமல் புகழ்வார்கள். அல்லது ஒரேயடியாக மட்டம் தட்டிப் பேசுவார்கள். நான் உங்களிடம் பேச ஆரம்பித்ததே தவறு'' என்றாள்.

"உமா! என்ன இப்படிக் கோபித்துக் கொள்கிறாயே. எங்களுக்குத் தோன்றியதை நாங்கள் சொன்னோம். உனக்கு அழகு என்று தோன்றினால் அப்படியே இருந்து விட்டுப் போகட்டுமே. ராய்! சுலோசனா உமாவின் பிரிய சிநேகிதி. அதனால் அவள் அழகாக இருக்கிறாள் என்றே நாம் ஒப்புக் கொண்டு விடுவோம்'' என்றான் அரவிந்த்.

இது உமாவின் கோபத்தை அதிகரித்தது. "வேண்டாம். நீங்கள் ஒன்றையும் ஒப்புக் கொள்ளவே வேண்டாம்'' என்று கூறினாள்.

உமாவும் அரவிந்தும் இந்த மாதிரி தினம் இருபது தடவைகள் சண்டை போட்டுக் கொள்வார்கள். குழந்தைக்கு நெற்றிக்குப் பொட்டு வைத்தால்தான் அழகாக இருக்கிறது என்பாள் உமா. வைக்கவே கூடாது என்பான் அரவிந்த். வாசல் அறையில் நான்கு நாற்காலிகள் இருக்க வேண்டுமென்பாள் உமா. கூடாது, மூன்றுதான் இருக்க வேண்டும் என்பான் அரவிந்த். உமா கோபித்துக் கொள்வாள். அரவிந்த் முகத்தைத் தூக்கிக் கொள்வான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் அவர்களுக்கு அது ஞாபகமிருக்காது. மறுபடியும் வேறு எதற்காவது தர்க்கம் செய்து கொண்டிருப்பார்கள். என்னை அவர்கள் அன்னிய மனிதனாகக் கருதாதபடியால் என் எதிர்லேயே சண்டையும், சமாதானமும் செய்து கொள்வார்கள்.

இதெல்லாம் ஒரு பக்கம் எனக்கு வேடிக்கையாக இருந்த போதிலும் இன்னொரு பக்கம் வேதனையைக் கிளப்பி விட்டுக் கொண்டிருந்தது. இந்து என்னுடன் இருந்தால் இப்படித்தான் சண்டை போடுவாள். நான் சொல்வதற்கெல்லாம் மாறுதலாகச் சொல்லுவாள். அவள் இஷ்டப்படி செய்ய நான் விட்டுக் கொடுக்கும்போது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும்?

இந்து உமாவைவிடக் கெட்டிக்காரி அல்லவா? அதற்கென்ன, அவளுக்கு இவர்களைப் போல் அலங்கரித்துக் கொள்ளத் தெரியாமல் இருக்கலாம். பேச்சிலும் சாமர்த்தியத்திலும் அவள் குறைந்தவள் அல்ல. இந்துவின் குழலும் விழிகளுக் கெதிரே யார்தான் போட்டியிட முடியும்?

உமா கேட்ட கேள்வி என்னை இவ்வளவு தூரம் சிந்திக்கத் தூண்டியது.

"நான் இன்னும் அழகான பெண்ணைப் பார்த்திருக்கிறேன்'' என்றேன்.

உமா சிரித்து விட்டாள். "அப்படிச் சொல்லுங்கள்! எங்கே? சினிமாவில் பார்த்தீர்களா?''

"இல்லை. இந்தியாவிலேயே பார்த்திருக்கிறேன்.''

"அப்படியா? அவள் யார்?''

நான் பதில் சொல்லவில்லை. இந்துவின் நினைவு விசுவரூபம் எடுத்து என் நெஞ்சம் முழுவதையும் நிறைத்தது. ஸ்ரீமதி ஹார்வியும், மிரியமும் இந்துவைப் பற்றிக் கேட்ட கேள்விகள் எல்லாம் ஞாபகம் வந்தன. உலகமெங்




பாரி கம்பெனியார்
மோதிரம் போன்ற மிட்டாய்களை
இப்பொழுது வழங்குகிறார்கள்

ருசியுள்ள மூன்று விதங்களில் கிடைக்கின்றன!




களிப்பூட்டுபவை, ருசியுள்ளவை!
வசீகரிக்கும் தெவிட்டாத சுவைகள்.
சுத்தமாயும், புதுமையுடனும், புஷ்டிகரமாக
கெடாமலிருக்கும்படி பாக் செய்யப்பட்டுள்ளன.

PRS. 2681

# ஆஸ்த்மா சளி முதல் நாளே கரைகிறது

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றி சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.




Sole Distributors:

**CHOWGULE & CO. (HIND) LTD.**

BOMBAY 1 · NEW DELHI · CALCUTTA 13 · MADRAS 1

கும் பெண்கள் ஒரே விதமாகத்தான் இருக்கிறார்கள் என்று எண்ணினேன்.

"என்ன பதிலையே காணவில்லையே? ரொம்ப ஆழ்ந்த சிந்தனையோ?" என்று கேட்டாள் உமா.

"ஏ! உமா! ராய் காரை ஓட்டுவது உனக்குத் தெரிகிறதல்லவா? அவனுக்கு நீ எதையாவது ஞாபகப் படுத்திக் கொண்டிருக்காதே. நாம் வீடு போய்ச் சேர வேண்டும். அவன் யோசனையில் ஆழ்ந்து விட்டால்..."

"அப்படி யெல்லாம் பயப்படாதே, அரவிந்த். என் உயிரின் மீது எனக்கு ரொம்ப ஆசை. என்னுடைய மனோரதம் ஒன்று நிறைவேறும் வரையில் நான் ரொம்ப ஜாக்கிரதையாக இருப்பேன். லண்டன் குண்டுகளுக்கெல்லாம் உயிர் தப்பி வரவில்லையா நான்?"

பேச்சு நல்ல வேளையாக உடனே யுத்த நிலைமைக்குப் போய் விட்டது. யார் ஜெயிப்பார்கள் என்பதைப் பற்றி ஒரே வாக்குவாதம் தொடங்கி விட்டது.

அப்போது வீடு வந்து சேரவே, "அரவிந்த்! எங்கேயோ நடக்கும் யுத்தத்தைக் குறித்து நீங்கள் ஏன் யுத்தம் செய்ய வேண்டும்? ஏதாவது உள்நாட்டு நிலையைக் குறித்துச் சண்டை போட்டாலும் பயன் உண்டு" என்று கூறி அவர்கள் விவாதத்தை முடித்து வைத்தேன்.

மறுநாள் மாலை ரமேஷ் என்னைத் தேடிக் கொண்டு வந்த போது எனக்குச் சந்தோஷமாக இருந்தது.

என்னைப் பார்த்ததும் ரமேஷ், "எங்கே நீங்கள் எங்கள் வீட்டுக்கு வராமல் போய் விடுவீர்களோ என்று தானே உங்களை அழைத்துப் போக வந்து விட்டேன். சுலோசனா வேறு என்னைத் துளைத்தெடுத்து விட்டாள்" என்றான்.

உமா என்னைப் பார்த்துச் சிரித்தாள். அரவிந்த் உமாவைப் பார்த்தான். நான் அதை யெல்லாம் கவனிக்காத மாதிரி ரமேஷைப் பார்த்து, "நீங்கள் ரொம்பச் சுத்தமாக வங்காளி பாஷை பேசுகிறீர்களே!" என்றேன்.

ரமேஷ் புன்னகையுடன், "உங்கள் பாஷைமீது எனக்கு ரொம்பப் பிரியம்" என்று கூறினான்.

நான் இப்போது உமாவையும் அரவிந்தையும் பார்த்துச் சிரித்தேன்!

"ஆம்! எங்கள் பாஷை ரொம்ப இனிமையானதுதான். ஆனால் தமிழ் பாஷையும் ரொம்ப உயர்ந்தது என்று கூறுகிறார்களே! அதன் இலக்கியத்தைப் பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றேன்.

"உண்மை. ரொம்ப உயர்வானது என்று நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அதிகமாக அதைப் பற்றித் தெரியாது."

"தமிழராகிய நீங்கள் அப்படிச் சொல்லலாமா? உங்களுக்கே உங்கள் பாஷை மீது அன்பு இல்லையானால்......"

"அன்பு இல்லையென்று யார் சொன்னார்கள்? எனக்கு அதன் உயர்வு முழுவதையும் அறிந்து கொள்ளுமளவுக்குப் படிப்பு கிடையாதென்று நான் கூறினேன். நீங்கள் தமிழைப் பற்றி இவ்வளவு நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களே!"



"நான் கேம்பிரிட்ஜில் தமிழ் பாஷை படித்தேன். ஆகவே கொஞ்சம் தெரியும்" என்று கூறினேன். அதன் பிறகும் அதைப் பற்றிப் பேசினால் குட்டு வெளியாகிவிடுமென்று பேச்சை மாற்றினேன்.

"நீங்களும் வாருங்களேன். உங்கள் சிநேகிதியைப் பார்த்துவிட்டு வரலாம்" என்று அரவிந்த், உமா இருவரையும் பார்த்துக் கூறினேன்.

"ஹரினுக்கு உடம்பு சரியாக இல்லை. அதனால் நான் வரவில்லை. நீங்கள் வேண்டுமானால் போய் விட்டு வாருங்களேன்" என்றாள் உமா. அரவிந்த்

போவதில் அவளுக்கு இஷ்டமில்லை என்று குரலிலிருந்தே தெரிந்தது.

அரவிந்துக்கு அது தெரியாதா என்ன? "நானும் வரவில்லை ராய். மன்னித்துக்கொள். எனக்கு உமாவை விட்டு வர......"

"போதுமே. விளையாட்டு!"

"என்ன விளையாடுகிறேன்? நான் இப்போது போனால், திரும்பி வந்ததும் கோபித்துக் கொள்ள மாட்டாயா?..ராய்! நீயே சொல்!"

"அரவிந்த்! இதை ஆராய்ச்சி செய்து வையுங்கள். நான் போய்விட்டு வருகிறேன். வரும்போது விடையும் கொண்டு வருகிறேன்" என்று கூறி விட்டு ரமேஷுடன் கிளம்பினேன்.

அந்தத் தம்பதிகளின் பூசலும், கோப தாபங்களும், அன்பு மொழிகளும், குழந்தையை இருவருமாகக் கவனித்துக் கொள்வதும் ஏன் என் மனத்தை இப்படி அலைக்கின்றன என்ற கேள்வி உள்ளத்தில் எழுந்தது. காரில் ரமேஷ் ஏதேதோ பேசிக்கொண்டு வந்தான். நான் கவனிக்காமல் மேலெழுந்த வாரியாகப் பதில் சொல்லிக் கொண்டு வந்தேன்.

திடீரென்று என் தனிமையை இனி மேல் பொறுக்க முடியாதென்று தோன்றியது. கட்டாயம் இந்துவை எப்படியாவது கண்டு பிடித்துவிட வேண்டும் என்று ஒரு வேகம் உண்டாயிற்று. வீட்டுக்குத் திரும்பிச் சென்றதும் இந்துவைத் தேட என்னென்ன முயற்சிகள் செய்ய முடியுமோ அத்தனையும் செய்ய வேண்டியது. அரவிந்திடம் கூறி யோசனை கேட்கலாம் என்று தீர்மானித்தேன். அதன் பிறகு கொஞ்சம் மனம் சாந்தியடைந்தது. அதற்குள் ரமேஷின் வீடும் வந்தது.

## அத்தியாயம் 4

# கல்கத்தா வாசம்

வக்கீல் பத்மநாபன் வீட்டில் எனக்கு வரவேற்பு தடபுடலாக இருந்தது. அவ்வளவு தடபுடலுக்கு நான் அருகதை உள்ளவனா என்பது எனக்கும் சந்தேகமாகவே இருந்தது. சீமை சென்று வந்தவர்களுக்குத் தனியான மதிப்பு உண்டு போலும் என எண்ணினேன்.

ரமேஷ் தன் தந்தைக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தான். சுலோசனாவும் அவரருகில் உட்கார்ந்திருந்தாள்.

சற்று நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகுதான் ரமேஷும், சுலோசனாவும் வேலையிலிருக்கிறார்கள் என்றும், பத்மநாபன் அவர்களைப் பார்க்கச் சென்னையிலிருந்து வந்திருக்கிறாரென்றும் தெரிந்தன. அண்ணனும் தங்கையும் மாத்திரம் தான் அங்கிருக்கிறார்களென்று தெரிந்த போது எனக்குக் கொஞ்சம் வியப்பாகக் கூட இருந்தது.

அவர்களுடைய வீடு நேர்த்தியான முறையில் அலங்கரிக்கப் பட்டிருந்தது. மேல் நாட்டுப் பாணியில் இல்லாமல், கவர்ச்சிகரமாக இருந்தது. கண்ணைப் பறிக்கும் கவர்ச்சி இல்லை. மனத்தைத் தொடும் கவர்ச்சியை அந்த வீட்டில் கண்டேன். கீழே பாய்கள் விரிக்கப் பட்டிருந்தன. சுவர்கள் குளுமையான பச்சை நிறம் பெற்று விளங்கின. அதற்கு இசைவாகக் குட்டையான கட்டில்களின் மெத்தைகளின் மீது பசுமை நிறத்தில் பற்பல விதப் பூ வேலைகள் செய்த விரிப்புக்கள் விரிக்கப்பட்டிருந்தன. ஜன்னல்களில் பளபளப்பான பாத்திரங்களில் கொத்துக் கொத்தாக மலர்கள் வைக்கப்பட்டிருந்தன.

ஜன்னல் வழியாகப் பார்த்தால் பற்பல மலர்கள் குலுங்கிய தோட்டம் தெரிந்தது. அதற்கப்பால் வீடுகள் தெரிந்தன. ஜன்னல் வழியாக மிதந்து வந்த தென்றல் காற்று உடலுக்கு ஒரு வித சுகத்தை அளித்தது.

அந்த வீட்டின் சூழ்நிலையில் அலைபாயும் என் மனத்துக்கு ஒரு ஆறுதல் கிடைத்தது. அரவிந்தும் உமாவும் ரொம்பப் பிரியமாக இருந்த போதிலும் அவர்களுடைய வீடு சிறியது. அதில் வேறு யாரோ குடியிருந்தார்கள். ஆகவே, ஒரே சத்தமாக இருக்கும். நிம்மதியாக ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது. தோட்டமும் கிடையாது. இறங்கியவுடன் பெரிய தெரு. ஆகவே சாமான்கள் விற்போரின் கூச்சலும், பஸ், கார் ஓடும் ஓசையும், எப்போதும் ஒரே சத்தமாகவே இருக்கும்.

ஆனால் ரமேஷின் வீட்டைச் சுற்றி ஒரே அமைதியாக இருந்தது. அந்த மாதிரி சூழ்நிலையில் நான் இருந்து வெகு நாட்களாயிற்று. கேம்பிரிட்ஜில் பேராசிரியர் ஆன்ட்ரூஸின் வீட்டில்

தான் அப்படிப்பட்ட அமைதியை நான் அனுபவித்திருக்கிறேன். வெளிப்புறத்திலுள்ள அமைதி நமது உள்ளத்துக்கும் சில சமயம் அமைதி அளிக்கிறதல்லவா? பேசினால் கூட அது கெட்டுப் போய் விடும் என்று பயந்து நான் மௌனமாகவே இருந்தேன்.

ரமேஷ் என்னைப் பார்த்து, "என்ன யோசிக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"உங்கள் வீட்டுக்குள் இருக்கும் போது நான் ரொம்பவும் நிம்மதியாக இருக்கிறேன். ஏன் அப்படி இருக்கிறது என்பதை என்னால் விளக்கிக் கூற முடியாது. ஆனாலும் உங்கள் வீட்டில் நிலவும் அமைதி எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. அதைக் கலைத்துவிட வேண்டாமென்று பேசாமல் இருக்கிறேன்" என்றேன்.

"அப்படியானால் நீங்கள் இனி மேல் கல்கத்தா வரும்போதெல்லாம் இங்கேயே வந்து தங்கி யிருக்கலாமே" என்றார் பத்மநாபன்.

"நான் சொல்ல நினைத்ததை அப்பாவே சொல்லி விட்டார்" என்று கூறினாள் சுலோசனா. ரமேஷ் அதை ஆமோதித்தான்.

"நான் கல்கத்தாவுக்கே வந்து விடும்படி நேரிட்டிருக்கிறது. உங்கள் வீட்டில் நிரந்தரமாகத் தங்க முடியாதல்லவா? இந்தப் பக்கத்தில் வீடு கொடுத்தார்களானால் சௌகரியமாக இருக்கும்."

"அப்படி யென்றால் உங்களுக்கு இங்கே மாற்றலாகி விட்டதா?" என்று கேட்டான் ரமேஷ்.

"எனக்கு இங்கே உள்ள கோர்ட்டில் மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டிருப்பதாக உத்தரவு வந்திருக்கிறது."

"அப்படியா? கங்க்ராஜுலேஷன்ஸ்!" என்றார் பத்மநாபன்.

"இன்று இங்கே விருந்து சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும். அது தயாராவதற்குள் நாம் ஏதேனும் ஒரு படத்துக்குப் போய் விட்டு வரலாம். வாருங்கள் மிஸ்டர் ராய்!" என்று அழைத்தான் ரமேஷ்.

"இப்போது நேரமாகி விட்டதே!"

"நேரமானால் என்ன? படம் பார்க்கவா போகிறோம். உங்களுடைய உத்தியோக உயர்வைக் கொண்டாடத்தானே போகிறோம்?" என்றான் ரமேஷ்.

'சரி' யென்று கிளம்பினேன். பத்மநாபன் வரவில்லை என்று கூறி விட்டதால் நாங்கள் மூவரும் புறப்பட்டுச் சென்றோம். இரவு அவர்கள் வீட்டில் சாப்பிட்டு விட்டு அரவிந்த் வீட்டை அடைந்த போது பத்து மணிக்கு மேல் ஆகி விட்டது.

கதவைத் திறந்த அரவிந்த், "என்ன ராய்! இவ்வளவு நேரம் என்ன செய்து




ஈ:—வாங்கோ! வாங்கோ, பெரியவரே! என்ன இப்படிக் கீழே உட்கார்ந்து விட்டீங்க? இப்படி 'ஜம்'னு ஹல்வா மேல் வந்து உட்காருங்களேன்!

---

கொண்டிருந்தாய்? ரமேஷ் வீட்டிலா இருந்தாய்?'' என்றான்.

''சினிமாவுக்குப் போனேனும். அவர்கள் வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டுமென்று கண்டிப்பாகக் கூறி விட்டார்கள். ஆகவே நேரமாகி விட்டது'' என்றேன்.

''உமா கூறியது சரியாகி விட்டது. உன்னை அவர்கள் சாப்பிடாமல் விட மாட்டார்கள் என்று கூறினாள். அதனால் தான் நாங்கள் உனக்காகச் சாப்பிடக் காத்திருக்க வில்லை.''

எனக்குப் பளிச்சென்று ஒரு எண்ணம் உதயமாயிற்று.

''உமா, அப்படிச் சொன்னாரா? ஏன்?'' என்று கேட்டேன்.

''எல்லாம் காரணமாகத்தான்!'' என்றான் அரவிந்த்.

நான் மௌனமாக இருந்தேன்.

''எதற்காக இப்படி முகத்தைத் தூக்கிக் கொள்கிறாய்? சந்தோஷப்பட வேண்டிய விஷயமல்லவா? பத்மநாபன் செல்வந்தர். நல்ல நிலையில் இருக்கிறார். கலாசனாவும் உனக்குத் தகுந்த பெண்தான்.''

''அரவிந்த்! இந்தப் பேச்சை மாத்திரம் தயவு செய்து எடுக்காதே. எத்தனை தரம் உனக்கு இதைச் சொல்வது?''

''நீ உன் மனத்திலிருப்பதைத்தான் என்னிடம் சொல்லேன். அதற்காவது ஏதேனும் முயன்று பார்ப்போம்.''

''சமயம் வரும்போது சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு என் அறைக்குச் சென்றேன். அன்றிரவு எனக்குத் தூக்கமே வரவில்லை.

அதன் பிறகு நான் ரமேஷ் வீட்டுக்குப் போகவில்லை. நேரே சாந்திபூர் சென்று கல்கத்தாவுக்குத் திரும்பி வர ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தேன்.

கல்கத்தாவில் எனக்கு ஒரு சிறிய வீடு அளிக்கப்பட்டது. ரொம்பச் சௌகரியமான வீடு. என்னுடைய பூர்வீக வாழ்க்கையைப் பற்றி நான் நினைத்துப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு இந்த மாறுதல் சொல்லி முடியாத வியப்பை அளிக்கும். என் அன்னை இருந்திருக்கக் கூடாதா என்று வருத்தப்படுவேன். அவருடைய மனோரதம் எப்படியோ நிறைவேறி விட்டது. அதை அவர் சூக்ஷ்ம சரீரத்திலிருந்து பார்த்து மகிழத்தான் செய்வார் என்று எண்ணுவேன்.

வீட்டில் சமையலுக்கு ஒரு ஆசாமியை நியமித்திருந்தேன். அவன் சாதம் போடும்போதெல்லாம், இந்து சமைத்து எனக்கு அன்போடு பரிமாறினது ஞாபகம் வரும். என் அன்னை மோர் சாதம் மாத்திரம் போட்டாலும் அதில் அன்பையும் கலந்து போடுவார் என்பது நினைவுக்கு வரும். அதன் பிறகு சாப்பிடவே பிடிக்காது.

'எதற்காக உத்தியோகம் பார்க்கிறோம்? எதற்காகப் பெரிய வீட்டில் வாழ்கிறோம்? எதற்காகப் பெரிய மனிதர்கள் என்று கூறப்படுபவர்களிடம் பழகுகிறோம்? எல்லாவற்றுக்கும் மேலாக எதற்காக உயிர் வாழ்கிறோம்?' என்ற கேள்விகள் எழுந்து என் கண்களின் முன்னால் நர்த்தனமாடும்.

இரண்டு மூன்று தடவை சென்னை சென்று இந்துவைப் பற்றி விசாரித்து விட்டு வந்தேன். என்ன செய்தும் பலன் இல்லாமல் போயிற்று. சென்னை போலீஸ் ஸ்டேஷனில் இந்துவின் படத்தைக் கொடுத்து விட்டு வரலாம் என்ற எண்ணம் கூடத் தோன்றியது. ஆனால் ஏனோ அப்படிச் செய்ய மனம் இடந்தரவில்லை. கைதிகளின் படங்களும், திருடர்களின் படங்களும் உள்ள இடத்தில் இந்துவின் படத்தையும் வைத்து விட்டால் என்ன செய்வதென்று பயந்தேன். ஆனால் அவளைச் சிறையிலேயே கொண்டு வைத்த பிறகு ஒன்றும் செய்ய முடியாமல் தவிக்கிறேன். இதை விதி என்று சொல்லாமல் என்ன சொல்வது? (தொடரும்)

எல்லோருக்கும் தெரியும் —




ஆகையால்தான்

மற்றெந்தத் தேயிலையையும் விட அதிகப்படியான

ஜனங்கள் **ப்ரூக் பாண்ட் தேயிலையையே**

அருந்துகிறார்கள்!








NOPAIN









KIWI
BOOT POLISH
BLACK
STAIN POLISH
BLACK KIWI

# அவன் மௌனம்

எஸ். வேலுப்பிள்ளை

நியாய சபையில் ஜூரர்கள் ஏகமனதாகத் தீர்ப்பளித்தார்கள், எதிரி குற்றவாளியென்று. முத்து கொலைக்குற்றம் சாட்டப்பட்டுக் கைதிக் கூண்டில் நின்று கொண்டிருந்தான்.

நீதிபதி தீர்ப்பளிப்பதற்கு முன்னர், "நீ ஏதாவது கூற விரும்புகிறாயா!" என்று கைதியைக் கேட்டார். அவன் இருந்த மன நிலையில், "நீதியரசரே: எனக்கு மரண தண்டனை விதித்து என் ஆசைக் காதலி சீதா சென்ற இடத்துக்கே என்னையும் அனுப்பிவிடுங்கள்" என்றுதான் கேட்க விரும்பினான். ஆனால் அவனால் பேச முடியவில்லை. ஒன்றுமே பேசாது மௌனம் சாதித்தான். உயிர்மீது அவனுக்கு ஆசையிருந்தால்தானே!

நீதிபதி தமது தீர்ப்பை எழுதி வாசித்தார். முத்து எதிர்பார்த்தபடி அவனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. சிறைக் காவலர்கள் முத்துவின் கையில் விலங்கை மாட்டி நீதிஸ்தலத்திலிருந்து அழைத்துச் சென்றனர்.

ஆயுளின் இறுதி நாளை எதிர் நோக்கிச் சிறைக் கூடத்தில் காத்திருந்தான் முத்து. மரண தண்டனை பெற்ற மற்றக் கைதிகள் இந்த உலகிலிருந்து விடைபெற்றுக் கொள்ளப் போகின்றோமே என்று ஏங்கினார்கள். ஆனால் முத்துவோ மனத்தில் எள்ளளவேனும் சலனமின்றிச் சாந்தமாயிருந்தான்.

* * *

**யா**ருக்கும் தெரியாமல் இந்த உலகிலே பிறந்த ஒரு ஆத்மா யாருக்கும் தெரியாமலே இந்த உலகத்திலிருந்து மறையப் போகிறது. அதைப் பற்றிச் சிந்திக்க யாருக்கும் அவகாசமில்லை; சிந்திக்க வேண்டிய அவசியமுமில்லை. முத்து இந்தப் பரந்த உலகில் ஒரு துரும்புக்குச் சமானம். அவன் இருந்தாலென்ன; இறந்தாலென்ன! மரண தண்டனை நிறைவேற்றப்பட்ட பின்னர் ஏதாவதொரு பத்திரிகையில் எங்காவது ஒரு மூலையில் 'தூக்குத் தண்டனை நிறைவேற்றப்பட்டது' என்ற தலைப்பின் கீழ் முத்துவின் ஜீவிய சரித்திரத்தின் இறுதி அத்தியாயம் பிரசுரமாகலாம். அதை இரண்டொருவர் அகஸ்மாத்தாகப் பார்த்தாலும் பார்க்கலாம். ஆனால் ஒருவராவது "ஐயோ, பாவம்" என்று கூறி ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடப் போவதில்லை.

முத்து, கொழும்பு மாநகரிலே, கொச்சிக் கடை என்னும் இடத்தில் உள்ள ஒரு சந்தில் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்னர் ஒரு துறைமுகத் தொழிலாளியின் மனைவி என்று சொல்லிக் கொண்ட ஒருத்தியின் வயிற்றில் பிறந்தான். அவன் பிறக்கும் பொழுது பணக்கார வீட்டுக் குழந்தைகளைப் போலத் தாயைப் படுத்தி வைக்காமல், டாக்டருக்கு வேலையோ கூலியோ கொடுக்காமல் பிறந்து விட்டான். முத்து பிறக்க வேண்டுமே என்று அவனுடைய பெற்றோர்கள் தவமிருக்கவில்லை. நாள் தவறாமல் துறைமுகத்தில் மூட்டை தூக்கும் வேலை கிடைத்தால் போதுமென்ற ஆத்ம திருப்தியுடன் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த பாட்டாளியின் வீட்டில் அழையா விருந்தாளியாகப் பிறந்தான், முத்து.

பிள்ளை பிறந்து விட்டதே என்று பெற்றோர் பெருமகிழ்ச்சி கொள்ளவில்லை; கவலைப்படவும் இல்லை. இரண்டோடு மூன்று என்று எண்ணிப் பிள்ளையை வளர்த்தார்கள். முத்து பிறந்தது போலவே வளர்ந்தும் வந்தான், பெற்றோருக்குத் தொல்லை கொடுக்காமல். அவனுடைய தகப்பன் அவனுக்கு 'குளுகோஸ்' வாங்கிக் கொடுக்கவுமில்லை. தாய் தொட்டில் கட்டி மெத்தை போட்டு அதில் வைத்துச் சீராட்டவும் இல்லை. காற்றும் வெளிச்சமும் புகாத அந்தச் சந்தில் மனிதர் உறையும் பொந்து என்று சொல்லக் கூடிய ஒரு குடிசையில் முத்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். இதர சேரிக் குழந்தைகளோடு சேற்றில் புரண்டான். இனிமேல் விற்று முதலாக்க முடியாதென்று

கண்டு, கடைக்காரர் சாக்கடையில் எறிந்த காய்கனிகளையும், பணம் படைத்தோர் எறிந்த எச்சில் இலைகளில் மிஞ்சியிருந்த ஆகாரங்களையும் பொறுக்கித் தின்றான். பிறந்த மேனியோடு மழையில் நனைந்தான்; வெய்யிலில் காய்ந்தான். எனினும் மூத்து நோய் நொடியில்லாமல் ஆரோக்கியமாக வளர்ந்து வந்தான். சுகாதார முறையில் அடைத்து அனுப்பப்படும் ஆஸ்திரேலியன் ஆப்பிள் பழத்தை ஜலத்தில் கழுவித் தோலைச் சீவிச் சாப்பிடும் பணக்காரப் பிள்ளைகளுக்கே 'டிப்தீரியா' வந்து விடுகின்றதென்று டாக்டர்கள் கூறுகிறார்கள். அழுகிக் கெட்டுப் போய் உண்பதற்கு உதவாதென்று ஊத்தை வாளியில் எறிந்த வாழைப்பழத்தைத் தின்னும் மூத்து போன்ற வறிய குழந்தைகளும் கொழு கொழு என்று வளர்கின்றன. இதுவும் இயற்கை செய்யும் விநோதந்தானா!

மூத்து பள்ளிப் பருவமான ஏழு வயதை அடைந்தான். எனினும் அவனுடைய வாழ்க்கையில் மாற்றமுண்டாகவில்லை. அவன் தந்தை அவனைப் பள்ளியில் சேர்க்கவுமில்லை; தலைவிதியே யென்று நொந்து கொண்டு கால் ரூபாய் செலவழித்துத் தனயனுக்குச் சிலேட்டு வாங்கிக் கொடுக்கவு மில்லை. 'அப்பன் மூட்டை சுமக்க மகனுக்குப் பள்ளிப் படிப்பா!' என்று அவன் நினைக்கவுமில்லை; ஏதோ காலெழுத்து எழுதப் படிக்கத் தெரிந்தால் நல்லது தானே என்றெண்ணவு மில்லை; மூத்து தானாகவே, இயற்கையின் அணைப்பிலே வளர்ந்துவந்தான்.

பத்து வயதாகியும் பையன் வீட்டுக்குப் பாரமாக இருக்கிறானே என்று தாய்க்கு மனக்குறை. அவனுக்குத் தெரிந்த நாலு பெரிய மனிதரிடம் மூத்துவுக்கு எங்காவது ஒரு வேலை பார்த்துக் கொடுக்கும் படி சொல்லியும் வைத்தாள். மகனும் சம்பாதித்தால் ஒருவேளை அடுப்பெரியும் வீட்டில் இரண்டு வேளையும் அடுப்பெரிக்கலாமே என்ற நப்பாசை அவளுக்கு. ஆனால் சேரியிலே செலவில்லாமலே பிறந்து செலவில்லாமலே வளரும் பத்து வயதுப் பையனுக்கு மூன்று வேளையும் சோறு போட்டு மாதம் முடியச் சுளை சுளையாக நாலு ரூபாய் சம்பளமும் கொடுக்க எந்த முதலாளிதான் முன் வருவான்!—அதுவும் இந்தப் பஞ்ச காலத்தில். தவிரவும் பத்து வயதுப் பையன் செய்யும் வேலைக்கு நாள் ஒன்றுக்கு நாலு பணமாவது கூலி கொடுக்க யாருக்குத் தான் கட்டி வரும்!

மூத்துவுக்கு வேலை கிடைக்கவில்லை. தனது சந்ததிக்கே சொந்தமான விளையாட்டுக்களில் காலத்தைப் போக்கினான். கண்டக்டருக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு, ஓடும் டிராம் வண்டியில் தொற்றி ஏறிக்கொண்டு இலவசப் பிரயாணம் செய்வது அவனுக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்கு. இந்த விளையாட்டு காலக்கிரமத்தில் அவனைத் திருடர்களின் சகாவாக்கிவிட்டது. முதலில்லாத இந்த வியாபாரம் செய்யும் பேர்வழிகளுக்குக் கொழும்பில் பஞ்சமில்லை. காலை, மாலை வேளைகளில் நகரில் ஓடும் டிராம் வண்டிகளில் ஜனக் கூட்டம் அதிகமாயிருக்கும். சட்டைப் பைத் திருடர்கள், ஓடும் டிராம்களில் தொற்றி ஏறி ஏமாந்த பிரயாணிகளிடம் தமது கைவரிசையைக் காட்டி அவர்களின் மணிபர்ஸ், பௌண்டன் பேனா போன்ற பொருள்களைத் தட்டிக் கொண்டு போய்விடுவார்கள். இத்தகையவர்களின் சகவாசம் மூத்துவுக்குக் கிட்டியது. தான் செய்யும் காரியத்தின் நன்மை தீமைகளை உணர்ந்து கொள்ள முடியாத வயதினனாயிருந்த மூத்து அத் தொழிலை விருப்பு வெறுப்பின்றி மேற்கொண்டான். சகாக்களின் தூண்டுதலின் பேரில் அத் தொழிலில் ஈடுபட்ட மூத்து காலக்கிரமத்தில் கைதேர்ந்த 'பிக்பாக்கெட்' பேர்வழியாகி விட்டான்.



**வ**ருடங்கள் பல சென்றன. மூத்து இருபத்திரண்டு வயதுக் காளைப் பருவத்தினனானான். காமனுக்குத்தான் ஏழை பணக்காரன், முதலாளி தொழிலாளி யென்ற பாகுபாடு கிடையாதே! 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் இனம்' என்ற கொள்கையுள்ளவன் அல்லவா அவன்! தனது கரும்பு வில்லில்

அரும்புக் கணையைத் தொடுத்து முத்துவின் இரும்பு இதயத்தில் எய்தான் அவன். முத்துவுக்குக் காதல் பிறந்து விட்டது. ஏழைப் பாட்டாளியின் மகன் முத்து எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடவில்லை. அதே ஜிந்துப்பிட்டியில், அதே சந்தில் மற்றொரு மனிதப் பொந்தில் தன்னைப் போலவே ஒரு தொழிலாளிக்கு மகளாகப் பிறந்து, சிறு வயதிலேயே தகப்பனைத் தின்று விட்டுத் தாயின் பராமரிப்பில் இருந்த சீதை என்பவள்மீதுதான் முத்துவுக்குக் காதல் பிறந்தது. சீதையும் முத்துவை முழு மனத்துடன் விரும்பினாள். சீதையின் தாய் அப்பம் சுட்டு விற்று ஜீவனம் நடத்துபவள். சீதை தாய்க்கு உதவியாகச் சில்லறை வேலைகளைச் செய்வாள். முத்து அவர்களுடைய வாடிக்கைக்காரன்.

முத்து சில சமயங்களில் இரவு பத்துப் பன்னிரண்டு மணிக்குச் சினிமா பார்த்துவிட்டு அல்லது சிநேகிதர்களுடன் தெருச் சுற்றி விட்டு வீட்டுக்கு வருவான். வீடு பூட்டியிருக்கும். அந்த வேளையில் கதவைத் தட்டினால் பகல் முழுதும் இடுப்பொடிய மூட்டை சுமந்து களைத்து அலுப்புற்று அயர்ந்து தூங்கும் அப்பனிடம் வசவு வாங்கவேண்டியிருக்கும்.

அப்பொழுதெல்லாம் முத்து தெருவிலும் திண்ணையிலுமாக இரவைக் கழிப்பான். சில சமயங்களில் தெருவோரங்களில் படுத்துறங்க முடியாமல் போலீஸார் விரட்டியடிப்பதும் உண்டு. பாட்டாளி மக்கள் படுத்துறங்க இடமின்றிப் பட்டணத்துப் "பேவ்மெண்ட்"களில் தஞ்சம் புகுவது போலீசாருக்கு மட்டுமல்ல; சில சமயங்களில் வருணபகவானுக்கும் பொறுப்பதில்லை. இத்தகைய சங்கடங்கள் நேரும்போது முத்து சீதையின் அப்பக்கடையில்தான் இரவைக் கழிப்பான். கடை என்றதும் சாதாரணமாக நாலு சுவர், ஒரு கூரை, அது, இது எல்லாம் இருக்குமென்று எண்ணி விடக்கூடாது. நாலு ஓலைக் கீற்றால் வேய்ந்த ஒரு குச்சு. சுவரோ கதவோ ஒன்றும் கிடையாது. ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும் மூவர் நிற்கவும் இடமளிக்கக்கூடிய ஒரு சிற்றில். மூன்று அடுப்புக்கட்டிகள்தான் அங்கு நிரந்தரமாக இருக்கும். சில சமயங்களில் ஒரு சொறி நாயும் அதில் நிம்மதியாகப் படுத்துறங்கும். அதிகாலை ஐந்து மணிக்குச் சீதை அங்கு வந்து கூட்டிப் பெருக்கி அடுப்பைப் பற்ற வைப்பாள். தாய் ஒரு பானையில் மாவைக் கரைத்து எடுத்து வந்து அப்பம் சுட்டுத் தடுக்கில் எடுத்து வைத்து விற்பாள். பகல் பத்து மணிக்கெல்லாம் அவளுடைய வியாபாரம் முடிந்து விடும்.

ஒரு நாள் சீதை வைகறைப் பொழுதில் கையில் விளக்கோடு அப்பக் கொட்டிலுக்கு வந்த பொழுது அங்கு யாரோ படுத்திருக்கக் கண்டு பயந்து போனாள். மினுமினுக்கென்று எரிந்து கொண்டிருந்த விளக்கொளியில் படுத்திருந்தவனின் பரந்த மார்பையும் திரண்ட தோள்களையும் கண்டதும் சீதைக்கு அவன் தங்களுடைய வாடிக்கைக்காரனாகிய முத்துதான் என்பது தெரிந்து போயிற்று. பயம் நீங்கியவளாக, "அண்ணே! அண்ணே!" என்று அழைத்துக் கையால் தட்டி எழுப்பினாள். சீதையின் மலர்க் கையின் ஸ்பரிசம் முத்துவுக்கு இதமாக இருந்தது. கொஞ்சநேரம் நித்திரைபோல் பாசாங்கு செய்துகொண்டிருந்து விட்டு மௌனமாக எழுந்து கண்ணைக் கசக்கிக் கொண்டு போய் விட்டான். அன்று முதல் முத்து தினமும் அந்த அப்பக் கொட்டிலையே சயனக்கிரகமாக உபயோகித்து வந்தான். தினமும் காலையில் சீதையின் முகத்தில் விழிப்பது அவனுக்கு அதிர்ஷ்டமாகப்பட்டது. நாளடைவில் சீதை அதிகாலை மூன்று மணிக்கே அப்பக் கொட்டிலைக் கூட்டிச் சுத்தப்படுத்தி வைப்பதற்குச் செல்ல ஆரம்பித்து விட்டாள். காரணம், முத்து மீது அவளுக்குக் காதல். முத்துவுக்கும் அவள் மீது உயிர். பல நாட்களுக்குப் பின்னர் சீதையின் தாய்க்கும் இவர்களின் இரகசியம் தெரிய வந்தது.

ஆனால் அவள் அதை ஆதரிக்கவுமில்லை; ஆட்சேபிக்கவும் இல்லை. தெரியாதவள் போல் இருந்து விட்டாள்.



சீதை தன்னை அலங்கரித்துக் கொள்வதில் தனி ஆர்வம் காட்டினாள். சீப்பு, சோப்பு, பவுடர் போன்ற அலங்காரப் பொருள்கள் ஒவ்வொன்று

# 43 லக்ஷம் வீடுகளுக்கு அஸ்திவாரம் எவ்வளவு பலமாக இருக்கவேண்டும்?

சென்ற சில ஆண்டுகளாக நம் நாட்டு ஜனத்தொகையின் பெரும் பகுதி, நகரங்களிலேயே குடியேறிவிட்டது. ஏற்கனவே போதிய வசதியற்ற இந் நகரங்களில் இவர்கள் மிக நெருக்கடியான வீடுகளில், அளவற்ற கஷ்டத்தில் வசிக்கிறார்கள். இதை நிவர்த்தி செய்ய, 43 லக்ஷம் புது வீடுகள் தேவை.

*1947-ம் வருடத்தில் நம் நாட்டில் 14,50,000 டன் செமிண்ட் உற்பத்தி செய்யப்பட்டது. ஆனால் தற்சமயம் 43,40,000 டன்கள் உற்பத்தியாகின்றன. அதாவது 1947-ம் வருடத்தின் உற்பத்தியைவிட ஏறக்குறைய மூன்று மடங்கு அதிகம். உன்னதமான முறையில் அமைக்கப்பட்டு, திறமையுடன் நடத்தப்படும் 26 செமிண்ட் தொழிற்சாலைகளில், 40,000 பேர்கள் வேலை செய்கிறார்கள். நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு எஃகு இன்றியமையாதது. இதனால்தான் டாடா அயரன் அண்டு ஸ்டீல் கம்பெனியார் தங்களுடைய தொழிற்சாலையின் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக பல வேறு திட்டங்களை கையாண்டு வருகிறார்கள்.*

| இரும்பு உற்பத்தி | |
|---|---|
| *1955* | *10,50,000* |
| *1959* | *20,00,000* |

## தனியார் தொழில் தேசநலனுக்காகப் பாடுபடுகிறது




TN 576

கச் சீதைக்குக் கிடைத் துக் கொண்டிருந்தன. பல நாள் பழகியும் சீதைக்கு முத்து என்ன தொழில் பார்க்கிறான் என்று தெரியாது. அவள் கேட்கவுமில்லை; அவன் சொல்லவும் இல்லை. சிற்சில நாட்களில் முத்து ஐந்து பத்து என்று சீதைக்குப் பணம் கூடக் கொடுப்பான். அப்பொழுதும் சீதை அவனுடைய தொழிலைப் பற்றியோ, சம்பளத்தைப் பற்றியோ கேட்டதில்லை. அவள் முத்துவைப்பற்றி உயர்ந்த அபிப்பிராயமே கொண்டிருந்தாள். அவன் கண்ணியமான ஏதோ ஒரு தொழில் செய்வதாகவே அவள் எண்ணியிருந்தாள். களவெடுத்துச் சம்பாதிக்கிறான் என்பது அவளுக்குத் தெரியாது. அதனால் சீதை அவனையும் தன்னையும் மானசிக தம்பதிகளாக்கி இன்பக் கனவு கண்டாள்.



இவ்வுலகில் பக்திச் செல்வத்தைப் பரப்பி, கர்நாடக சங்கீத உலகில் மும்மூர்த்திகளில் ஒருவராகத் திகழ்ந்தவர் தியாகராஜ சுவாமிகள். இப் புண்ணிய மூர்த்தியின் உற்சவத்தைச் சென்னையில் உள்ள திருவல்லிக்கேணி ஆர்ட்ஸ் அகாடமியினர் வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள். மார்ச் மாதம் ஐந்தாந்தேதி யன்று தியாகராஜப் பெருமானின் திருவுருவத்தைத் திருவல்லிக்கேணியிலுள்ள நான்கு ரத வீதிகளிலும் ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். இவ் வைபவத்தில் காருகுறிச்சி அருணாசலம் குழுவினர் நாகசுர இன்னிசை விருந்தளித்தனர். இரவு ஏழரை மணியிலிருந்து இரண்டரை மணி வரை அவர்களது நாகசுர இசை வெள்ளத்தில் திருவல்லிக்கேணி மக்கள் மூழ்கி, ரசித்து மகிழ்ந்தனர்.

ஒரு நாள் வழக்கம் போல் சீதை அதிகாலையில் அப்பக் கொட்டிலை அடைந்த பொழுது முத்து கத்தைக் கத்தையாக கரன்ஸி நோட்டுகளை வைத்து இருட்டில் தடவித் தடவி எண்ணிக் கொண்டிருந்தான். சீதை விளக்கைப் பக்கத்தில் இருந்த உரல் மீது வைத்து விட்டு உரிமையோடு அவன் பக்கத்தில் அமர்ந்து, "ஏது இவ்வளவு பணம்! உனக்கு நேற்று வந்த சம்பளமா!" என்று கேட்டாள்.

"எனக்குத்தான் தினமும் சம்பளமாச்சே; நேற்று கொஞ்சம் அதிகமாகவே கிடைச்சது. அவ்வளவுதான்" என்றான் அசுவாரஸ்யமாக.

"அப்படீன்னா!" — சீதைக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது.

"நானென்ன, மற்றவர்களைப்போல் காலை முதல் மாலைவரையில் இடுப்பொடிய வேலை செய்து போட்டு மாதம் முடியும்வரை சம்பளத்துக்குக் காத்திருப்பவன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாயா!" அவனுடைய பேச்சில் பெருமிதம் தொனித்தது.

"என்ன! அப்படியானால் நீ என்ன வேலை பார்க்கிறாய்!"

"நானா! பிக்பாக்கெட் வேலை!"

"என்ன! நீ திருடனா!"

"சட்! பொத்து வாயை!"

தன் காதலன் கள்ளன் என்பதை அறிந்த சீதை பதைபதைத்துப் போனாள். ஆகாயத்தில் இன்பமாகப் பறந்து கொண்டிருக்கும் போது எங்கிருந்தோ வந்த ஒரு அம்பினால் தாக்கப் பட்டுக் குற்றுயிரும் குலையுயிருமாகப் பூமியில் விழுந்த ஒரு பட்சியின் நிலையை அடைந்தாள் சீதை. அவளுடைய எண்ணமெல்லாம் நிமிஷத்தில் பகற் கனவாயிற்று. முத்து சக்கிலியத் தொழில் செய்பவனாக இருந்தால்கூட அவள் கவலைப்பட்டிருக்க மாட்டாள். ஆனால் திருட்டுத் தொழில் செய்யும் ஒருவனின் மனைவியாக இருப்பதை அவள் நஞ்சென வெறுத்தாள்.

"இத்தனை நாளாக நீ ஏன் இதை மூடு மந்திரமாக வைத்திருந்தாய்!" என்று கேட்டாள் அழுதுகொண்டே.

"அதற்கு இப்ப என்னவாம்!" என்றான் முத்து அசட்டையாக.

"திருடனை நான் கட்டிக்க மாட்டேன்!" சீதையின் வார்த்தைகளில் ஆத்திரம் தொனித்தது.

"என்ன சொன்னாய்!" என்று கேட்ட முத்து சீதையின் கன்னத்தில் 'பளார்' என்று அறைந்துவிட்டு வேகமாக அங்கிருந்து எழுந்து போய் விட்டான்.

* * *

எங்கும் நிசப்தம் குடிகொண்டிருந்த அந்த வைகறைப் பொழுதில் முத்து கால்போன போக்கில் போய்க் கொண்டிருந்தான். அவனுடைய இளம் உள்ளம் நிகழ்ந்த சம்பவத்தை நினைத்து கழிவிரக்கப்பட்டது. பிறந்தது முதல் பிறர் அன்புக்குப் பாத்திரப் படாத அவன் சீதை காட்டிய அன்பைத் தனக்குக் கிடைத்த பெரும் நிதி என்றே எண்ணியிருந்தான். அந்த அன்புக்குத் தன்னுடைய ஆத்திரப்புத்தி முற்றுப் புள்ளி வைத்து விட்டதே என்று எண்ணிக் கவலைப்பட்டான்.

களவெடுத்த காசு தக்கமாட்டா தென்று வாதாடினாலும் களவெடுப்பவன் ஒரு நாளைக் கில்லாவிட்டால் ஒரு நாளைக்குச் சிறையில்

## உனக்குக் கூடவா?




**பேசிய மூன்: என்ன ஐயா, சின்னமுள்ளு! நகராமல் படுத்து விட்டே! என்ன உனக்குக்கூட எட்டு மணி நேர வேலையா?**

---

தள்ளப்பட்டுக் கம்பி எண்ண வேண்டியவன் தானே! தனது கணவனுக்கு அத்தகைய கதி நேரக்கூடாதென்று ஒரு பெண் விரும்பினால் அதில் தவறு என்ன! நாம் ஏன் அப்படி மிருகத்தனமாக நடந்து கொண்டோம்!

எத்தனை விதமாக யோசித்துப் பார்த்தாலும் முத்துவுக்குத் தான் செய்யும் தொழில் கௌரவமான தென்றோ, நேர்மையான தென்றோ நினைக்க முடியவில்லை. 'திருட்டுப் பிழைப்பும் ஒரு பிழைப்பா! எலி மாதிரி பதுங்கிப் பதுங்கி, சதா காலமும் பிறரைக் கண்டு நடுங்கி, ஓடுங்கித் திரியும் பிழைப்புத்தானே திருட்டுப் பிழைப்பு! திருடும்போது தப்பித் தவறி யார் கண்ணிலாவது பட்டு நீ அகப்பட்டுக் கொண்டு விட்டால் உன்னைச் சும்மா விட்டுவிடுவார்களா! நெஞ்சில் கை வைத்துப் பார்த்து இதற்கெல்லாம் பதில் சொல்லு. நேர்மையற்றவனோடு வாழ எந்தப் பெண் சம்மதிப்பாள்! தன் கணவனும் மற்றப் பேர்களைப்போல் கௌரவமாக வாழ வேண்டும் என்றுதானே நினைப்பாள்!' என்று கேட்டு அவன் மனசாட்சி அவனை உலுக்கி விட்டது.

சிந்தனையில் திருப்பம் ஏற்படவே முத்து திரும்பி விட்டான். இப்பொழுதே சென்று 'இன்றோடு திருட்டுத் தொழிலுக்குத் தலை முழுகிவிட்டேன்' என்று அவளிடம் சத்தியம் செய்து கொடுத்து அவளிடம் மன்னிப்புக் கேட்போம் என்று தீர்மானித்துக் கொண்டான்.

முத்து ஆப்பக் கொட்டிலை அடைந்த பொழுது சீதையின் தாயும் மாப்பானையோடு அப்பக் கொட்டிலுக்கு வந்து கொண்டிருந்தாள். கொட்டிலில் விளக்கு வெளிச்சத்தைக் காணுதபடியால் "தங்கச்சி! சீதா! எங்கேடி போய்விட்டாய்!" என்று குரல் எழுப்பினாள். முத்துவோடு அவள் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருக்கையில், தான் அசம்பாவிதமாக நடந்து கொள்ளக் கூடாதென்ற பெரும் எண்ணம் அவளுக்கு. கண்ணும் கூர்மையை இழந்துவிட்ட வயது.

இதற்குள் கொட்டிலை அடைந்து விட்ட முத்து, மங்கிய வெளிச்சத்தில் கற்பனைக்கும் எட்டாத அந்தக் கோரக் காட்சியைக் கண்டு பதைபதைத்துப் போனான். ஆம், சீதை விட்டத்தில் தொங்கிக் கொண்டிருந்தாள். சீதா இப்படிச் செய்வாளென்று அவன் கனவிலும் நினைக்க வில்லை. தான் முரட்டுத்தனமாக நடந்து கொண்டமைக்காகத் தன்னையே நொந்து கொண்டு அவளிடம் மன்னிப்புக் கேட்க ஓடோடியும் வந்தான். ஆனால் அவள் அவசரப்பட்டு அவனிடமிருந்து—இல்லை, இந்தச் சண்டாள உலகத்திடமிருந்தே விடை பெற்றுக் கொண்டாள். அதற்குள் சீதையின் உயிர் உடலை விட்டுப் பிரிந்திருக்காதென்ற நப்பாசையால் அவன் உரலை நிமிர்த்தி வைத்து அதன் மேல் ஏறி நின்று சீதையின் கழுத்திலிருந்த சுருக்கைத் தளர்த்தி அவளைக் கீழே இறக்கினான்.

இதற்குள் சீதையின் தாய் கையில் சுமந்து வந்த மாப்பானையை அப்படியே போட்டு விட்டு ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். அக்கம்பக்கத்தார் அவளுடைய கூக்குரலைக் கேட்டு ஓடி வந்து சீதையின் மூக்கில் கை வைத்துப் பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கினார்கள். சிலர் போலீஸுக்கு ஓடினார்கள்.

இரண்டு போலீஸ்காரர்கள் வந்து பிரேதத்தைச் சுற்றியிருந்த ஜனக் கும்பலை விரட்டினார்கள். சீதையின் தாயையும் முத்துவையும் விசாரித்தார்கள். 'முத்து நல்ல பிள்ளை. அவன் ஒன்றுமே செய்திருக்க மாட்டான்' என்று சீதையின் தாய் அவனுக்காகப் பரிந்து பேசினாள். "கேட்கும் கேள்விக்கு மட்டும் பதில் சொல், கிழவி!" என்று போலீஸார் அவளுடைய வாயை அடக்கினார்கள்.

பிரேதப் பரிசோதனை நடந்தது. சீதையின் கன்னத்திலிருந்த விரல் அடையாளங்கள் முத்துவின் கை விரல்களின் நீளத்துக்குச் சரியாயிருந்தன. அதிகாரிகளுக்குச் சரியான துப்பு கிடைத்து விட்டது. கன்னத்தில் அடித்ததை முத்து ஒப்புக் கொண்டான். "கழுத்தில் கயிற்றைப் போட்டு இறுக்கி விட்டத்தில் தொங்க விட்டதும் நீதானே!" என்று கேட்டார் மரண விசாரணை அதிகாரி. அவன் 'இல்லை' என்று சொல்லியிருக்கலாம். ஆனால் அவன் உதடுகள் ஏனோ அசைய மறுத்து விட்டன. சோகமே உருவான அவன் கண்கள் இரத்தக் கண்ணீர் சிந்தின. அவனுடைய மௌனம் அதிகாரிகளுக்குக் கோபம் உண்டு பண்ணியிருக்கலாம். ஆனால் அவன் ஒன்றையுமே லட்சியம் செய்யவில்லை. இதயம் பொங்கிப் பொருமி வெடித்து உள்ளேயிருந்த நன் முத்து எங்கேயோ தெறித்துப் பறந்து போய் விட்டது.

போலீஸார், மரண விசாரணை அதிகாரி, மாஜிஸ்டிரேட், வழக்கறிஞர்கள் ஆகிய அனைவரது வேலையைச் சுலபமாக்கி விட்டது முத்துவின் மௌனம்.

# ரெக்ஸ் ஜெல்லி தூள்கள்

காலை நேர பனித்
துளியைப் போன்ற
புதுமையானவை




இப்பொழுது

ரெக்ஸ் ஜெல்லி தூள்கள் கையிட்டுக் கெடுக்க முடியாததும், ஈரப்பசை கிரகிக்க முடியாததுமான புதிய பாக்கிங் செய்யப்பட்டு வருகிறது. இது சுத்தமான பழத்தின் காலை நேர புதுமைச் சுவையையும் குன்றச்செய்கிறது. அதிகப்படியான பாதுகாப்புடன் புதிய குறைந்த விலையில் உங்களுக்குக் கிடைக்கிறது.



**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிட்.**

பம்பாய்-1 — கல்கத்தா-1




SG/248 b

உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

## ஒரு பாரமாக்க வேண்டாம்.



தலைவலிகள், உடம்பெரிச்சல், பசி மந்தம், ஜீவசக்தியின்மை, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் ஜீரண உறுப்புகளில் அசுத்தமிருப்பதன் கொடியான விளைவாகும். மலச் சிக்கல் உங்கள் வாழ்வையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ரூக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும் ருசிமிகுந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக்கி கழிவுடைப் பொருள்களை நிச்சயமாக வெளியேற்றுகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடன் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள்.

ஆகவே ப்ரூக்லாக்ஸ் என்று கேட்டு கவனித்து வாங்குங்கள்!




## ப்ரூக்லாக்ஸ்

### ஒரே இரவில்

உங்களை குணமாக்கும்

(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்—1

BMA.19




கதிர்வேலுக் கொத்தனார் பெருமான் கோயிலுக்குச் சொந்தமான பெரிய மனைக் கட்டு ஒன்றைக் குத்தகைக்கு எடுத்தார். அவ்வளவு பெரிய மனைக்கட்டை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று அவருக்கு முதலில் புரியவில்லை. வேலங்குடியிலிருந்த அவருடைய மைத்துனன் அந்த ஊரில் ஒரு பெரிய சவுக்குத் தோப்பைக் குத்தகைக்கு எடுத்திருந்தான். 'ஏன் அங்கிருந்து சவுக்கு மரங்களை வெட்டிக் கொண்டு வந்து போட்டு உடைத்து விறகு வியாபாரம் செய்யக் கூடாது' என்று அவருக்குப் பட்டது. உடனே அவருக்கு மந்திரி போலிருந்த சிலரைக் கலந்து ஆலோசித்தார். எல்லோரும் மிகவும் தரமான யோசனை என்று ஊக்கமளித்தார்கள். கேட்கவேண்டுமா? சில நாளில் பெருமான் கோயில் மனைக் கட்டில் விறகு வியாபாரம் ஆரம்பமாகி விட்டது. ஐந்தாறு லாரிகளில் சவுக்கு விறகுகளைக் கொண்டு வந்து அடுக்கியும் அந்தப் பெரிய மனைக் கட்டில் ஏராளமான இடம் காலியாக இருந்தது. குறைந்த விலையில் காட்டு மரங்கள் வேறு கிடைத்ததால் அவைகளையும் வாங்கி அடுக்கினார். இவ்வளவு செய்தும் அந்த மனைக்கட்டில் இன்னும் ஏராளமான இடம் வீணாகக் கிடந்தது. விறகு வியாபாரத்தோடு வைக்கோல், வறட்டி முதலியவைகளையும் வாங்கி வைத்து ஏன் வியாபாரம் செய்யக்கூடாது என்று அவருக்குத் தோன்றியது. அவருக்கு மந்திரி போலிருந்தவர்களும் இதை முழு மனத்தோடு ஆதரித்தார்கள். போர்போராக வைக்கோலை வாங்கிக் குவித்தார். மலை மலையாக வறட்டிகளை வாங்கி வந்து அடுக்கி வைத்தார்.

வியாபாரம் குறைவில்லாமல் நடந்து வந்தது. ஒரு நாள் அங்கு விறகு வாங்க வந்த கிழவி ஒருத்தி, "ஏன் கொத்தனாரே, நீங்க ஏன் மண்ணெண்ணெய் வியாபாரம் செய்யக் கூடாது? நாங்கள் மண்ணெண்ணெயை வாங்க நெடுந் தூரம் போக வேண்டியிருக்கிறதே?" என்றாள்.

கொத்தனாருக்கு இது மிகவும் அருமையான யோசனையாகப் பட்டது. உடனே தன் மந்திரிகளாகிய குஞ்சிதப் பத்தர், சோலைமலைப் பிள்ளை, சிவசாமிப் பண்டாரம் முதலியவர்களைக் கலந்து ஆலோசித்தார். எல்லோருக்கும் இது மிகவும் உத்தமமான காரியமாகவே பட்டது. 'இது தரமான காரியம். விறகுக்கும் மண்ணெண்ணெய்க்கும் தோதுதான். விறகு வாங்குகிறவர்கள் அவசியம் மண்ணெண்ணெய் வாங்காமல் போக மாட்டார்கள். அவசியம் செய்யுங்கள்' என்றார்கள். உடனே மண்ணெண்ணெய் வியாபாரமும் ஆரம்பமாகி விட்டது.

ஒரு நாள் ஒரு பெண் மண்ணெண்ணெய் வாங்குவதற்காகக் கையில் ஒரு புட்டியுடன் எங்கோ போய்க் கொண்டிருந்தாள். கடையில் உட்கார்ந்திருந்த கொத்தனார் அவளைக் கை தட்டி அழைத்து, "மண்ணெண்ணெய் வாங்கத்தானே போறே...?" என்று கேட்டார்.

"ஆமாம்" என்றாள் அந்தப் பெண்.

"ஏன் நம்ம கடையிலேதான் மண்ணெண்ணெய் இருக்குதே! நெடுந்தூரம் ஏன் போகணும்?" என்றார்.

"உங்க கடையிலே மண்ணெண்ணெய் இருக்குதுன்னு தெரியும். ஆனால் தீப்பெட்டி இருக்குதா? இங்கே மண்ணெண்ணெய் வாங்கி விட்டுத் தீப்பெட்டிக்காக அங்கே ஓட முடியுமா?" என்றாள்.

இதற்குக் கொத்தனாரால் பதில் சொல்ல முடியவில்லை, "சரி, போ!" என்று அந்தப் பெண்ணைப் போக விட்டார். தீப்பெட்டி வியாபாரம் இல்லாததால் மண்ணெண்ணெய் வியாபாரம் குறைவதாக அவர் மனத்தில் பட்டது. உடனே தன் மந்திரிகளைக் கலந்து ஆலோசித்தார். வழக்கம்போல் எல்லோரும் கொத்தனாரின் யோசனைக்கு ஆதரவாகத்தானிருந்தார்கள். உடனே பத்து குரோஸ் தீப்பெட்டிகளை வாங்கி மண்ணெண்ணெய் டின்களுக்குச் சமீபத்தில் பார்வையாக அடுக்கி வைத்து விட்டார்.

கடையில் ஒரே ஒரு வேலைக்காரன். ஒருவர் விறகு கேட்பார், விறகை நிறுத்துக் கொடுப்பான். மற்றொருவர் வந்து மண்ணெண்ணெயைக் கேட்பார். அதை அளந்து கொடுப்பான். ஒரு வண்டிக்காரன் வந்து ஒரு கட்டு வைக்கோல் கேட்பான். மண்

ணெண்ணெய் எடுத்துக் கொடுத்த கையோடு வைக்கோலைக் கட்டிக் கொடுப்பான். உடனே தீப்பெட்டிக்காக ஒரு கிராக்கி நிற்கும். அதையும் எடுத்துக் கொடுப்பான். விறகு வைக்கோல், மண்ணெண்ணெய், தீப்பெட்டி எல்லாம் தொடர்ந்து வியாபாரம் ஆகிக்கொண்டுதானிருந்தன.



ஒரு நாள் நடு நிசி வேளையில் திடீரென்று கதிர்வேலுக் கொத்தனாரின் கடை தீப்பிடித்து எரிய ஆரம்பித்தது. யாராவது கடையில் தீ வைத்தார்களா அல்லது தானாகவே தீப்பிடித்துக் கொண்டதா என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. எப்படியோ தீ வெகு வேகமாகப் பரவியது. தீயை அணைப்பதற்குரிய வசதிகள் இருந்தும் முடியவில்லை. நல்ல வேளை! சமீபத்தில் வேறு கட்டடங்கள் எதுவுமில்லை. கொத்தனார் குதித்தார்! அழுதார்! அலறினார். என்ன செய்வது? அறுபது டன் விறகு, ஐம்பது காலன் மண்ணெண்ணெய், மூன்று போர் வைக்கோல், மூவாயிரம் வறட்டி, ஆறு குரோஸ் தீப்பெட்டி இவைகளெல்லாம் சாமான்யமா? தீயும் அதற்குத் தகுந்தாற்போல்தானே இருக்கும்?

வைக்கோல் பற்றி எரிவதைப் பார்த்த ஒருவர் "விறகு வியாபாரம் செய்ய நினைத்த மனிதர் வைக்கோல் வியாபாரத்தையும் வைத்துக் கொண்டதுதான் பெரிய பிசகு" என்றார்.

"வைக்கோல் வியாபாரம் செய்ததில் பிசகு ஒன்றுமில்லை. மண்ணெண்ணெய் வியாபாரம் எதற்காகச் செய்யத் தொடங்கினார்?" என்றார்.

"மண்ணெண்ணெய் வியாபாரம் செய்ததும் பிசகில்லை ஐயா. தீப்பெட்டி வியாபாரம் செய்ய ஆரம்பித்ததிலேதான் வந்தது ஆபத்து" என்றார் ஒருவர் தீர்மானமாக.

கொத்தனாரின் மந்திரி போன்ற நண்பர்களாகிய குஞ்சிதப் பத்தரும் சிவசாமிப் பண்டாரமும் வெகு தூரத்தில் நின்று கொண்டு வேடிக்கைபார்த்த வண்ணம் பேசிக் கொண்டிருந்தனர்.



"நான் அப்பொழுதே சொன்னேன். 'விறகுக்குப் பக்கத்திலே மண்ணெண்ணெய் வைக்காதே ஐயான்னு......' சொன்னால் கேட்டாரா?" என்றார் குஞ்சிதப் பத்தர்.

"அதனால் கெடுதல் இல்லை. மண்ணெண்ணெய்க்குப் பக்கத்திலே தீப்பெட்டியைக் கொண்டுபோய் அடுக்கினார். பாருங்க. அதுதான் கெடுதலாய் முடிந்தது" என்றார் பண்டாரம்.

கொத்தனார் பதறிக் கொண்டே ஓடி வந்தார். "ஐயா! உங்க பேச்சையெல்லாம் கேட்டு நான் மோசம் போனேனே?" என்று அலறினார்.

"உங்களுக்கு நாங்களாக யோசனை சொல்ல வரல்லே. நீங்க யோசனை கேட்டீங்க, நாங்க சொன்னோம். அவ்வளவுதான்! செய்கிற வியாபாரத்தை ஜாக்கிரதையாய்ச் செய்திருந்தால் இவ்வளவு ஆபத்து ஏற்பட்டிருக்காது" என்றார் பத்தர்.

"இதிலே ஆரம்பமே பிசகு. இவரு ஏன் அனாவசியமாய்க் கோயில் மனையைப் போய்க் குத்தகைக்கு எடுத்தாரு? அதைக் குத்தகைக்கு எடுத்ததினால்தானே ஏதாவது வியாபாரம் செய்யலாம்னு எண்ணம் ஏற்பட்டது?" என்றார் பண்டாரம்.

"அதிலே ஒன்றும் பிசகில்லை. நான்தான் அவரைச் சும்மா இருக்கீங்களே அந்த மனைக்கட்டைக் குத்தகைக்கு எடுத்து வையுங்க, ஏதாவது செய்யலாம்னு சொன்னேன். ஆனால் நீங்கதான் அவருக்கு விறகுக் கடை வைக்கும்படி யோசனை சொன்னீங்க" என்றார் அப்பொழுதுதான் அங்கு வந்த சோலைமலைப் பிள்ளை.

"நான் சொன்ன யோசனை சரியான யோசனைதான். பத்தருதான் அவரை வைக்கோல் வறட்டி இதெல்லாம் கொண்டு வந்து வைத்து வியாபாரம் செய்யச் சொன்னாரு" என்று பழியைப் பத்தர்மீது சுமத்தினார் பண்டாரம்.

"நான் சொல்லியதில் எவ்விதப் பிசகும் இல்லை. வைக்கோல் வறட்டி எல்லாம் விறகு வகையைச் சேர்ந்தது தானே? அதனால் தீப் பிடிக்கக் காரணமே இல்லை. பிள்ளைவாள் தான் மண்ணெண்ணெய் வியாபாரத்தைத் தீவிரமாக ஆதரித்தார். நான் பிள்ளைவாள் அபிப்பிராயத்துக்கு எதிர்ப்

பாக இருக்கக் கூடாதுன்னு 'செய்யலாம்' என்று சொல்லி வைத்தேன்'' என்றார் குஞ்சிதப் பத்தர்.

"மண்ணெண்ணெய் வியாபாரம் செய்ததிலேயேயும் குடிமுழுகிப் போய்விடவில்லே. தீப்பெட்டி வியாபாரம் செய்யத் தொடங்கினார் பாருங்க. அதிலேதான் வந்தது மோசம். இந்த யோசனையைப் பண்டாரத்தய்யாதான் ரொம்பத் தீவிரமாய் ஆதரித்தார். நமக்கென்னன்னு நான் மையமா யிருந்துட்டேன்'' என்றார் பிள்ளை.



"மையமாய் இருந்திங்களோ ஆதரவாய் இருந்திங்களோ, எல்லாம் இப்படி நாசமாய்ப் போகும்ன்னு நான் நினைக்கல்லே. இப்போ மேலே என்ன செய்வதென்று தான் எனக்குப் புரியல்லே...'' என்றார் கொத்தனார் சோகம் நிறைந்த குரலில்.

"கவலைப் படாதீங்கோ! ஏதாவது யோசனை செய்வோம்'' என்றார் குஞ்சிதப் பத்தர்.

"இனிமேல் யோசனை செய்யறதுக்கு என்ன இருக்குது? இப்போ விறகெல்லாம் நல்லா எரிந்து கரியாகி இருக்கும். இப்போ அடுப்புக் கரிக்கு நல்ல கிராக்கி. கரி வியாபாரம் செய்தால் என்ன?'' என்று கேட்டார் பிள்ளை.

"அடடே! மிகத் தரமான யோசனை. அதுதான் சரி. அப்படியே செய்துடுங்க கொத்தனாரே!'' என்றார் பண்டாரம்.

மிகப் பயங்கரமான தீக்கு இரையாகிக் கொண்டிருக்கும் தன் கடையைப் பார்த்துக் கொண்டே கொத்தனார், "என்ன ஐயா அநியாயம்? எல்லாருமாகச் சேர்ந்து யோசனை கூறி என் காசையெல்லாம் இப்படிக் கரியாக்கி விட்டீங்களே!'' என்றார் வருத்தத்தோடு.

"அதனால் என்ன கொத்தனாரே! இப்போ இந்தக் கரியையெல்லாம் விற்றுக் காசாக்கி விடுங்களேன்'' என்று எல்லாருமாக அவருக்கு யோசனை கூறினார்கள்.

"வேறு வழியே இல்லே. இதுதான் சரியான வழி. இப்போ ஊரிலே கரி ரொம்பக் கிராக்கி. இப்போ ஏற்பட்ட நஷ்டத்தை அதிலே எடுத்துடலாம். மிக அருமையான தீர்மானம்'' என்று கூறினார் குஞ்சிதப் பத்தர்!

# இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறது



# பாமாலிவ்

## டால்கம் டீ-லக்ஸ்

நீங்கள் எதிர்பார்த்துக்
காத்திருந்த டால்கம் பவுடர்!
உண்மையிலேயே நேர்த்தியான
டால்கின் சகலகுணங்களுடன், ஒரு
புதியரம்மிய வாசனையும்சேர்ந்தது!
வெறியூட்டும் 17 ஸெண்டுகளின்
அற்புதக்கலவைசேர்ந்த பாமாலிவ்
டால்கம் டீ-லக்ஸின் நறுமணம்
உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம்
அடையச் செய்யும் ... மணிக்
கணக்காக உங்களுக்குக் குளுமை
யும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!



அள்ளையில் சுத்தமும்
சௌகர்யமும்



குழந்தைக்கு இதம்
அளிக்க அதைத்
தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத்தடுக்க
மேலெங்கும் அதை
உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு
இதமும் புத்துணர்ச்
சியும் அளிக்க




# பாமாலிவ்

## டால்கம் டீ—லக்ஸ்

# அருணாவின் தந்தை

கு. பஞ்சாபகேசன்



**சு**வர் ஓரத்தில் உட்கார்ந்திருந்த குழந்தையின் முகத்தில் ஒரு விதமான ஏக்கம் சூழ்ந்திருந்ததாக அதன் தாயார் நினைத்துக் கொண்டதில் தவறு ஏதுமில்லை.

குழந்தை தன் தகப்பனாரைப் பார்த்து மூன்று மாசங்களுக்கு மேலாகி விட்டது. அதன் முகத்தில் ஏதாவது ஏக்கம் சூழ்ந்திருப்பதாகத் தாயார் நினைத்துக்கொண்டாளானால், 'பாவம், அப்பா இல்லாத ஏக்கம் குழந்தையை வருத்துகிறது' என்று அவளாக நினைத்துக் கொண்டாள்.

ஒரு வயது கூட நிரம்பப் பெறாத குழந்தை. அதன் உள்ளத்தில் புரியாத பாசம் இருந்து, தன் முகத்தில் புரிய வைத்து, தாயாருக்கும் புகுத்தி விடுகிறது!

மீனா தன் கணவருக்குச் சமீபத்தில் இப்படி ஒரு கடிதம் எழுதினாள்:

"...அநேக கோடி நமஸ்காரம். குழந்தை அருணா உங்கள் பிரிவால் மிகவும் வாடுகிறாள்; மிகவும் இளைத்துப் போயிருக்கிறாள். சமீபத்தில் தான் குழந்தைக்கு அம்மை கண்டு, இப்போது தேவலையாகி இருக்கிறது. அம்மை கண்டிருக்கிற சமயத்தில் கடிதம் எழுதக் கூடாது என்று சொன்னதால்தான் தங்களுக்கு எழுதவில்லை...ஊரிலிருந்து தாங்கள் மாற்றலாகிப் போய் இன்றோடு மூன்று மாதமாகப் போகிறது. தாங்கள் அங்கே வீடு பார்ப்பதாகவும் இல்லை; தங்களை நான் வந்தடையும் காலம் நெருங்கி வருவதாகவும் இல்லை. தங்களுக்கு இருக்கும் அநேக வேலைகளுக் கிடையில், பேதை என்னுடைய வேண்டுகோளுக்கு இரங்க நேரம் கிடைப்பது அபூர்வம்தான். இதற்காக நான் தங்களைக் குறை கூறுவதாக எண்ண வேண்டாம். தங்களுக்கு எப்போது சௌகரியமோ, எப்போது நேரம் கிடைக்கிறதோ, எப்போது திருவுள்ளம் இரங்குகிறதோ—அப்போது தாங்கள் வீடு பார்க்கலாம்......

ஆனால், ஒரு வேண்டுகோள். இன்னும் பதினைந்து நாட்களுக்குள் நமது அருமைக் குழந்தை—ஒரே கண்மணி—அருணாவின் ஆயுஷ் ஹோமம், பிறந்த நாள் வருகிறது. தாங்கள்தான் குழந்தைக்குச் செய்ய வேண்டுமாம். எப்படியாவது ஒரு வாரம் லீவு எடுத்துக் கொண்டு வந்து குழந்தையை ஆசீர்வதிப்பீர்கள் என்று எண்ணுகிறேன்."

அந்தக்கடிதத்துக்கு அவளுடைய பர்த்தாவிடமிருந்து இன்னும் பதில் கடிதம் வரவில்லை. மீனாவுக்குக் குமுறல் மனசில் கொந்தளித்துக் கொண்டு வந்தது. குழந்தை அருணாவைப் பார்த்தாவது மனசு ஆறுதல் பெறலாம் என்று குழந்தையைப் பார்த்தாளானால், அருணாவின் முகத்தில் ஏக்கம் இருப்பதாகத் தெரிந்து, இன்னும் அதிகப்படியாக மனசு குமைந்து போனாள் மீனா.

அப்போது எதிர் வீட்டுக் கோமு உள்ளே ஹாலுக்கு வந்தாள்.

"என்ன, குழந்தை நன்றாக விளையாடுகிறாளா? அம்மை கண்டு பிழைத்தது பெரிய பிழைப்பாகப் போயிற்று...ஏண்டி மீனா! குழந்தைக்கு ஆண்டு நிறைவு வரப் போகிறதாமே? உன் கணவர் வருவாரோ இல்லையோ?" என்று கேட்டாள் கோமு.

"வருவார், மாமி! வருகிறேன் என்றுகூட எழுதியிருக்கிறார்..." என்று ஒரு பெரிய பொய்யாகச் சொல்லி வைத்தாள் மீனா.

கோமுவின் பெருமையைப் பற்றி மீனு அறியாதவனல்ல. தினசரி காலை மணி ஒன்பதரைக்குத் தன் கணவனுக்கு வாசலில் காப்பி பிளாஸ்கைக் கொண்டு வந்து கொடுத்து, அவனை ஆபீஸுக்கு அனுப்புவதிலிருந்து, எப்போது பார்த்தாலும் கோமுவுக்குத் தன் குடித்தனப் பெருமைதான். கோமுவும் பதினைந்து வருஷங்களாகக் குடித்தனம் நடத்துகிறாள். அவளுடைய வயிற்றில் ஒரு 'வரம்' ஜனித்ததில்லை. அந்தக்குறை கோமுவுக்கு மிக உண்டு என்று மீனுவுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் அப்படிப்பட்டவள்கூட இன்றைக்குத் தன்னைவிட உசத்தி ஆகிவிடப் போகிறாளே என்று மீனுவின் மனத்தில் வருத்தம் குமைந்து வந்தது.



"சந்தோஷம், மீனு, தலைச்சனுக்கு ஆண்டு நிறைவு நடக்கிற போது, அதைத் தகப்பன் இருந்துதான் நடத்தி வைக்க வேண்டும் என்று சொல்வார்கள். பாவம், தூர தேசத்துக்கு மாற்றலாகிப் போயிருக்கிறார். லீவு கிடைத்து வருகிறேன் என்று சொன்னதே பெரிய காரியம். குழந்தையைப் பிரிந்திருக்க ஒரு தகப்பனால் எத்தனை நாட்கள்தான் முடியும்?" என்று பேசிக் கொண்டே போனாள் கோமு.

அத்தனைக்கும் தலையாட்டிக் கொண்டே வந்தாள் மீனு.

கோமு அங்கிருந்து தன் வீட்டுக்குப் போனபிறகு, மீனுவின் தாயார், "என்னடீ மீனு! கோமுவிடம் அப்படிச் சொல்லி விட்டாய்...?" என்றாள்.

"அப்போது வேறு விதத்தில் சமாளித்துப் பொய் சொல்லிக் கொள்ளலாம், அம்மா. ஆனால், அம்மா, அவர் வராமலிருக்க மாட்டார். அன்றைக்கு ரெயில்வே ஸ்டேஷனில், வண்டி ஏறப் போகு முன்பு, அருணாவை 'விடேன்' என்று தூக்கிக் கொண்டு கண்ணால் ஜலம் விட்டு அழுதாரே? அவர் நிச்சயம் வருவார், அம்மா! நீ வேணுமானால் பாரேன்!"

மீனு இப்படிச் சொல்லி முடிக்கு முன்பு வாசலில், "தபால்!" என்ற குரல் கேட்டது.

வாசலுக்கு ஓடினாள் மீனு. அவன் வழக்கமாகக் கடிதம் எழுதும் நீலக் கவரைத் தபால்காரர் கொடுத்து விட்டுச் சென்றார்.

பிரிப்பதற்குள் பல கோடி எண்ணங்கள். ஆர்வம் என்ற கடலில் துமி தெறிக்கும் அலைகளாக எழுந்தன மீனுவின் மனசில். கடிதம் பேசியது:

"அன்புள்ள மீனுவுக்கு,

ஆசிர்வாதம். உன் கடிதத்துக்குப் பதில் எழுத உடனே அவகாச மில்லாதபடி செய்து விட்டது ஆபீஸ் வேலை. இதற்காகக் கோபம் வேண்டாம்.

எனக்கு எப்போதும் நம் கண்மணி அருணாவின் நினைவுதான். குழந்தையின் போட்டோப் படத்தை எப்போதும் சட்டைப் பைக்குள்ளேயே வைத்துக் கொண்டு, அடிக்கடி எடுத்துப் பார்த்துக் கொண்டு மனசு ஆறுதல் பெற்றுக் கொண்டிருக்கிறேன். குழந்தை உடம்பு அசௌக்கியமாக இருந்து எழுந்தாள் என்பதைக் கேட்க மிகவும் வருத்தமாயிருக்கிறது.

அருணாவுக்கு ஆண்டு நிறைவு என்ற எண்ணமே என் மனசைக் குதூகலிக்கச் செய்கிறது. ஆனால், மீனு, நீயே யோசித்துப் பார். நான் வேலைக்கு வந்த புதிது. இப்போது லீவு கேட்டால் தருவார்களா? அப்படிக் கேட்டாலும் நன்றாயிருக்குமா? அப்படிக் கொடுத்தாலும், தூரம் என்ன, சும்மாவாயிருக்கிறது? ஆயிரம் மைல்களுக்கு மேலே.

தவிர, இன்னொன்று. இங்கே இருக்கும் சில பெரியவர்களைக் கேட்டுப் பார்த்தேன். 'பெண் குழந்தைதானே?...ஆணாக இருந்தால் ஆயுஷ் ஹோமத்துக்குப் போக வேண்டியது அவசியம்தான்' என்று சொன்னார்கள். இதனால் எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து அருணாவின் ஆண்டு நிறைவை அங்கே கொண்டாடி விடுங்கள். குழந்தைக்கு என் மானச ஆசீர்வாத பலம் மிகவும் உண்டு. நான் சொல்வது உனக்கு உசிதமாகப்படும் என்றே எண்ணுகிறேன்.

வீடு விஷயம் இன்னும் நிச்சயப்படவில்லை. கிடைத்ததும் தந்தி அடித்து உன்னை வருவித்துக் கொள்வேன்.
அன்புள்ள ரகுபதி."

மீனு, அருணாவைத் தூக்கிக் கொண்டு குழந்தைபோல் அழ ஆரம்பித்து விட்டாள்.

ஆறு வருஷங்களுக்குப் பிறகு அருமையாகப் பெற்ற குழந்தையை ஆணென்றும் பெண்ணென்றும் பார்ப்பதா? குழந்தைக்குச் செய்வதென்றால், ஆயிரம் மைல் என்ன ஒரு பிரமாதமா? யாரோ பெரியவர்கள் சொன்னார்களாம்! இந்தப் பெரிய தாத்தா கேட்டுக் கொண்டு சும்மா இருக்




## ஜி.எஸ்.எப். கொள்ளேகாலம்

பட்டுப் புடவைகளை
உபயோகித்து
அவைகளின்
விசேஷ சிறப்பை
உணருங்கள்



கவர்ன்மெண்ட் ஸில்க் பிலேச்சர் கொள்ளே காலம் பட்டு ஜவுளிகள் 'ஆட்வுட்' மிஷினில் முறுக்கேற்றிய உயர்தர பிலேச்சர் பட்டு நூல்களை உபயோகித்து தயாரிக்கப் பட்டிருப்பதால் சோபைக்கும் உறுதிக்கும் ஈடு இணையற்று விளங்குகின்றன.

### கவர்ன்மெண்ட் ஸில்க் பிலேச்சர்ஸ்

கொள்ளேகாலம்



சென்னை சர்க்கார் கைத்தொழில் &
வியாபார இலாக்காவின் ஒரு பகுதி



"என்ன அற்புதமான படங்கள்! என்னிடமும் ஒரு விலையுயர்ந்த காமிரா இருந்திருந்தால் . . .!"



"எதற்காக? என்னுடைய காமிரா ஒரு சாதாரண 'ப்ரௌனி' மாடல்தான். ஆனால் நான் எப்பொழுதும் கோடக் 'ப்ளஸ்-X' பிலிமை உபயோகிக்கிறேன். தெளிவான படங்களை எடுக்க அது மிகவும் சிறந்தது."

சிறு விபரங்களையும் தத்ரூபமாக எடுத்துக்காட்ட கோடக் 'ப்ளஸ்-X' பிலிமை உபயோகியுங்கள். முக்கியமாக என்லார்ஜ்மெண்ட்கள் செய்ய அது மிகவும் நல்லது.

கையில் பிலிம் இல்லாமல் அரிய சந்தர்ப்பங்கள் நழுவுவதைத் தவிர்க்க ஒவ்வொரு சமயத்திலும் உபயோகத்திற்கொன்றும், கைவசத்திற்கொன்றுமாக எப்பொழுதும் இரண்டு சுருள்கள் வாங்குங்கள்.




கோடக் லிட்.
(இங்லோந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய்-கல்கத்தா-டில்லி-மதராஸ்

னாராம்!...கடிதம் தவறாமல் எழுதமாட்டார்! வீடு பார்க்க மாட்டார்! தான் அருமையாகப் பெற்ற குழந்தையையும் பார்க்க—அதுவும் நல்ல, பெரு நாளில் பார்த்து ஆசீர்வாதம் செய்ய — வரவும் மாட்டாராம்! இவர் மனிதரே அல்ல; இரக்கமற்ற அரக்கர்...இவ்வாறு குமைந்தாள் மீனா; விக்கி விக்கி அழுதாள்.

குழந்தை அருணா, "அம்மா, அம்மா!" என்று அவளைச் சுற்றிச் சுற்றி வந்தது.

அழுகை அடங்கிய சமயத்தில் மீனாவுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. காகிதத்தையும் பேனாவையும் எடுத்தாள். ஆத்திரத்தில் வரிந்து வரிந்து எழுதினாள்.

"......தங்கள் அன்பு பூராவும் வெளிவேஷம் என்பதை இன்று நன்றாக உணர்ந்தேன். இதுதான் நான் தங்களுக்கு எழுதும் கடைசிக் கடிதம். தங்கள் பெண் அருணாவின்—இல்லை, என் அருமைக் கண்மணி அருணாவின் — ஆண்டு நிறைவை, ஓர் அனாதைக் குழந்தைக்கு நடத்துவதைப் போல் நடத்தத் தாங்கள் இஷ்டப்படுவதாக அறிந்தும், தங்களுடைய வரவுக்காக ஏங்கிய என் அறிவீனத்தைத்தான் குறை கூற முடியும். உங்கள் அன்பு வெறும் வெளிவேஷம். இனி அடிக்கடி இப்படிக் கடிதம் எழுதித் தங்கள் மன வருத்தத்தை நான் ஏன் கிளற வேண்டும்?"

மீனா கடிதத்தை எந்தத் தீவிரத்துடன் எழுதினாளோ, அதே தீவிரத்துடன் அதைத் தபால் பெட்டியிலும் சேர்த்து விட்டாள்.

அப்புறம்தான் அவளுக்கு மனசில் நிம்மதி வந்தது. அந்த நிம்மதியோடு மீனா ஆர அமர ஆலோசித்துப் பார்த்த போது தான் தவறு செய்து விட்டோமா என்று சந்தேகமாயிருந்தது அவளுக்கு.

'பாவம், அவர் எத்தனை வருத்தப்படுவார் கடிதத்தைப் பார்த்து. 'அனாதைக் குழந்தைக்கு நடத்துவதைப் போல' என்ற வார்த்தைகளை நாம் எழுதியிருக்க வேண்டாம்தான்' என்றெல்லாம் தோன்றியது.

ஆனால் எதிர் வீட்டுக் கோமு எதிர்ப்பட்டதும், அந்தக் கொஞ்ச நேரச் சலனமும் மீனாவின் மனசிலிருந்து விட்டகன்றது. 'இந்தக் கடிதத்துக்குத்தான் என்ன பதில் போடுவார் பார்ப்போமே' என்று அவள் எண்ணினாள்.

நாட்கள் பறந்து விட்டன. மறுநாள் குழந்தை அருணாவின் ஆண்டு நிறைவு. அன்றைய நாள் வரை ரகுபதியிடமிருந்து ஒரு கடிதமும் வரவில்லை.

"என்ன அம்மா மீனா, மாப்பிள்ளைக்குக் கோபம் வரும்படியாக ஏதாவது எழுதினாயா?" என்று கேட்டார் அப்பா.

"அப்படியெல்லாம் இல்லை, அப்பா..." என்றாள் மீனா.

அவள் மனம் அவளைக் குத்திக் காட்டியது. இயல்பாகவே ரகுபதி கொஞ்சம் பிடிவாத குணமுள்ளவன். பிடிவாத குணமுள்ளவர்களிடம் நெருவிசாகப் பழகித் தானே காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டும்? தான் அவசரப்பட்டு விட்டோமோ என்று தோன்றியது மீனாவுக்கு. 'தாங்கள் அவசியம் வரவேண்டும். தங்கள் வரவை அடியாள் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்...' என்று எழுதியிருந்தால் வந்திருப்பாரோ? அல்லது 'இதுவே கடைசிக் கடிதம்' என்று எழுதியிருப்பதற்குப் பதிலாக, 'இந்தக் கடிதத்தையே ஆயிரம் கடிதங்களாக எடுத்துக் கொண்டு தாங்கள் வர வேண்டும்' என்று எழுதியிருந்தால் வந்திருப்பாரோ? அல்லது 'உங்கள் அன்பு வெறும் வெளி வேஷம்' என்று எழுதியிருந்ததைத் தவிர்த்து, 'என் மேல் நீங்கள் கொண்டிருக்கும் அன்பு உண்மையானால்...' என்று எழுதியிருக்கலாமோ என்றெல்லாம் தோன்றியது.

இனி என்ன செய்து, என்ன பயன்! எதிர் வீட்டுக் கோமுவைத் திருப்தி செய்ய ஆயிரம் பொய்களைச் சொல்ல வேண்டியிருந்ததுதான் பலன்!......

ஆண்டு நிறைவன்று காலை மணி ஏழு இருக்கும். சபை குழுமியிருந்தது. ஆனால் மீனாவின் கண்களுக்கு அந்தச் சபை நிறைந்திருக்கவில்லை. ரகுபதி இல்லாத குறை அங்கே வெறிச்சோடிக் கிடந்தது, மீனாவின் கண்களுக்கு.

குழந்தை அருணா, நீலக் கலர் 'வெல்வெட்' சொக்காயில், தன் பொன்னுடல் பளபளக்க, கழுத்தில் சுவர்ணச் சங்கிலி மினுமினுக்க, தன் பொக்கை வாய் திறந்து சிரித்துக் கொண்டே மனையில் தன் தாத்தாவின் மடியில் உட்கார்ந்திருந்தாள்.

அப்போது வாசலில் சல சலப்பு—

"மாப்பிள்ளை வந்து விட்டார்..."

"வாருங்கள் ... வாருங்கள்...காலை வண்டிக்கா வந்தீர்கள்? ஒரு தந்தி கொடுத்திருக்கக் கூடாதா?"

"வாப்பா, ரகுபதி!"

உள்ளே வந்த ரகுபதி மனைக்கருகில் பாய்ந்து வந்து குழந்தை அருணாவை வாரி எடுத்துக் கொண்டான். அருணா சிணுங்கிக் கொண்டே அவனை ஒரு நிமிஷம் உற்றுக் கவனித்தாள். ஆனால் மறு நிமிஷமே தன் தகப்பனாரின் பரந்த தோள்களில் வெட்கத்தோடு தன் சின்னஞ் சிறு முகத்தைப் புதைத்துக் கொண்டுவிட்டாள்.

மீனாவின் உள்ளம், மகிழ்ச்சிக் கடலில், 'தகப்பன் என்ற பாசம் அவருக்கு இருக்காதா?' என்று குதி போட்டுக் கொண்டிருந்தது. அந்த நிமிஷத்திலிருந்து எதிர் வீட்டுக் கோமுவுக்கு எதிரில் பெருமையுடன் நடக்க ஆரம்பித்தாள் மீனா.

# படித்துப் பாருங்கள்

## KNOW MADURAI

தேவேந்திரன் ஒரு சமயம் கானகத்துள் தவம் செய்து கொண்டிருந்தபோது அங்கே ஒரு லிங்கத்தைக் கண்டெடுத்தான். அந்த லிங்கத்தை ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்து மாபெரும் ஆலயத்தையும் கட்டுவித்தான். பூஜைக்குரிய புஷ்பத்துக்கு என்ன செய்வது என்று இந்திரன் தவித்தபோது கோயில் குளத்தில் பொன் தாமரைமலர்கள் விரிந்துமலர்ந்தன. மேற்படி கோயிலையும் குளத்தையும் சுற்றிக் குலசேகரப் பாண்டிய மன்னன் நகரத்தை நிர்மாணம் செய்தான். அந்த நகரத்துக்கு என்ன பெயரிடலாம் என்று பாண்டியன் யோசித்தபோது சிவபிரான் அந் நகரின்மீது மலர்களின் மகரந்தத்துகள்களிலிருந்து பெருகிய இனிய தேன் துளிகளைப் பொழிந்தார். ஆகவே அன்று முதல் மதுரைக்கு 'இனிய நகரம்' என்னும் புனிதப் பெயர் வழங்கலாயிற்று. மதுரை என்றால் 'இனிய' என்பது பொருள்.

வைகை நதிக் கரையில் கம்பீரமாகக் காட்சி தரும் மதுரையிலே மீனாட்சி அம்மன் ஆலயமும், கண் நிறைக்கும் நான்மாடக் கூடங்களும், விண் மறைக்கும் கோபுரங்களும் ஆலயத்துக்குள் அமைந்திருக்கும் பொற்றாமரைக் குளமும் சரித்திரப் பிரசித்தமானவை.

தமிழ்ப் பண்பாடு, இலக்கியம், கலை ஆகிய எல்லாச் சிறப்புகளும் தெய்வத் தமிழ்நாட்டின் இதய பீடமாக அமைந்திருக்கும் மதுரையம் பதிக்கே உரியவை.

முத்தமிழ் வளர்த்த தமிழ்ச் சங்கம் தோன்றியது இங்கேதான்.

அறிஞர்களும், கவிஞர்களும், புலவர்களும், மன்னர்களும், நாவலர்களும், பாவலர்களும் கூடித் தோற்றுவித்த தமிழ்ச் சங்கப் பணியில் ஆதிசிவனும் பங்கு பெற்றார் என்று கூறப்படுகிறது. சங்கப் பலகையின் அங்கீகாரம் பெறப் புலவர்கள் பட்டபாடு பிரசித்தமானவை.

இடைக் காலத்தில் மங்கத் தொடங்கிய மதுரையின் மகிமையும் கீர்த்தியும் மீண்டும் புதிய பாண்டிய வம்சத்தினரால் புத்தொளி பெற்றது.

இப்போது காணும் மதுரைக் கோவிலையும், அதன் மகத்தான கோபுரங்களையும் பாண்டிய மன்னர்களே ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பாகக் கட்டி முடித்தனர். பின்னர் அங்கு நாயகர்களின் ஆட்சி ஏற்பட்டது. திருமலை நாயகரின் புகழுக்கும், கலைத் தொண்டுக்கும் மதுரையில் உள்ள ராயகோபுரமும் புது மண்டபமும் சிறந்த அத்தாட்சிகளாகும்.

பின்னர் தோன்றிய பிரிட்டிஷ் ஆட்சியின் பயனாகச் சரித்திர முக்கியத்துவம் பெற்ற மதுரை நகரம் சுகாதார வசதிகளையும், போக்குவரத்து வசதிகளையும் பெற்று இன்று தென்னிந்தியாவிலேயே புகழ்பெற்ற ஒரு முதல் தர நகரமாக விளங்குகிறது.

இத்தகைய அற்புத அழகு வாய்ந்த நகரத்தையும் மீனாட்சி அம்மன் ஆலயத்தையும், அதில் அடங்கியுள்ள சிற்ப அதிசயங்களையும், திருமலை நாயகன் மகாலையும் காண உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் தினந்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் மதுரைக்கு விஜயம் செய்கிறார்கள். மதுரையையும், அண்மையிலுள்ள அழகர் கோயில், யானைமலை, திருப்பரங்குன்றம், தெப்பக் குளம், கோடைக் கானல் ஏரி முதலிய இடங்களையும் கண்டு மகிழ்கிறார்கள்.

யாத்திரிகர்கள் இத்தனை இடங்களையும் அகமும் புறமும் கண்டுகளிக்கப் போக்குவரத்து வசதி அவசியமல்லவா! புகழ்பெற்ற டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் மதுரை நகரத்திலும் இன்னும் பல இடங்களிலும் சௌகரியமான வசதி பொருந்திய பஸ்களை விடுகிறார்கள். ஏறக்குறைய முந்நூறு டி. வி. எஸ். பஸ்கள் தமிழகத்தின் சாலைகளில் ஓடுகின்றன. மைலுக்கு அரையணா வீதமே கட்டணம் வசூலிக்கிறார்கள். எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும் டி. வி. எஸ். பஸ் குறித்த காலத்தில் குறித்த இடத்தை அடைந்துவிடும் என்பது பிரசித்தம்.

பஸ் நிர்வாகம் என்பது எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு டி. வி. எஸ். பஸ் சர்விஸ் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் வெளியிட்டுள்ள ஓர் அழகிய புத்தகத்தில் மதுரையைப் பற்றியும், டி. வி. எஸ். ஸ்தாபனத்தின் ஏற்பாடுகள் பற்றியும் பல விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புத்தகத்தின் அழகைச் சொல்லி முடியாது. அற்புத கோபுரத்தின் அழகிய வடிவத்தை அட்டையில் தாங்கி வெளியாகியிருக்கும் இப்புத்தகத்தில் பல அருமையான போட்டோக்களும் சித்திரங்களும் மதுரை மீனாட்சியம்மனின் திருவுருவப் படமும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

புத்தகம் முழுதும் வழ வழப்பான ஆர்ட் காகிதம். கண்ணுக்கும் கருத்துக்கும் ஒருங்கே விருந்தளிக்கும் அபூர்வ வெளியீடு. 'மதுரையை அறியுங்கள்' Know Madurai என்னும் இப் புத்தகம் டி. வி. எஸ். ஸ்தாபனத்தாரின் இலவச வெளியீடு.

## சங்கனும் ரங்கனும்

வீரதீரச் செயல்களே வீரனுக்குப் புகழைத் தேடித் தருகின்றன; செல்வத்தை வழங்குகின்றன. சங்கனும் ரங்கனும் மூத்த ராஜாவினால் புறக்கணிக்கப்பட்டுக் காட்டில் பல அல்லல்களுக்கு உள்ளானார்கள். ஆனால் அவர்களது வீரதீரத்தினால் பல இன்னல்கள் தீர்ந்தன; கொலைகார அரக்கனும், கல்லாக்கும் மந்திரவாதியும் மாய்ந்தொழிந்தார்கள். நரியும், முயலும், சிங்கமுமே அவர்களது சாகசங்களுக்கு ஒத்தாசை புரிகின்றன. எளிய நடையில் பல சுவை மிகுந்த திடுக்கிடும் நிகழ்ச்சிகளை இந் நூலில் புகுத்தியிருக்கிறார் இந்நூல் ஆசிரியர். குழந்தைகள் விரும்பிப் படிக்கக் கூடிய அழகிய நூலாக வெளியிட்டதற்குப் பாராட்டுகிறோம்.

ஆசிரியர்: திரு ரத்னம், பிரசுரம்: தமிழ் நிலையம், மார்த்தாண்டபுரம், புதுக்கோட்டை; விலை ரூ. 1-0-0.

# ரின்ஸோ வெள்ளைத் துணிகளை வெள்ள வெளேரென்று வெளுக்கிறது – அழுத்தித் தேய்க்கவே வேண்டியதில்லை!

ரின்ஸோவினால் வெளுத்த எந்த வெண்மை ஆடையையும், பழைய வழியில் துவைத்த ஒன்றோடு ஒப்பிட்டுப் பாருங்கள். ரின்ஸோ மிகையான வெண்மையாக வெளுப்பது பளிச்சென்று புலப்படும்! அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோ சலவையில் புரட்சி செய்துள்ளது! ரின்ஸோவின் வியக்கத் தக்க விறு விறுப்பு வாய்ந்த நுரை, உங்கள் கண்களுக்குத் தென்படாத அழுக்கையும் விரட்டிவிடும். அழுத்தித் தேய்க்க வேண்டாம்! அடிக்க வேண்டாம்! பிரகாசமான அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் வேறொன்றும் சேர்க்க வேண்டியதில்லை. வெள்ளைத் துணிகளாகட்டும், நிறமுள்ள துணிகளாகட்டும்—குடும்பத்தின் சலவை எல்லாவற்றிற்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!






அற்புத சோப் பவுடர்!



## ரின்ஸோ அதிக வெண்மையாக வெளுக்கிறது!

R. 5-50 TM

இந்தியாவில் தயாரித்தது

# இதுதான்

# காஸ்டரோமா




## ...ஒரு கூந்தல் டானிக்

## வேறு விதமானது....

காஸ்டரோமா வேறு விதமானது.. சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கும் முள்ளிலிருந்து விலகி நிற்கும் ரோஜா புஷ்பத்தைப்போல் இதர டானிக்குகளிடமிருந்து வேறுபட்டுள்ளது.

பகல், இரவு முழுவதிலும் தலையிலுள்ள கூந்தலை நறுமணத்தோடிருக்கச் செய்யும் பூவிதழ்-புதிய ப்ரெஞ்ச் வாசனைத் திரவியத்தை உடையதால் இது மற்றவைகளிடமிருந்து மாறுபட்டுள்ளது.

காஸ்டரோமா வெள்ளை எண்ணெய் கலப்பற்றது. வாசனை முற்றிலும் நன்ருக அகற்றப்பட்டதும், கறையையோ அல்லது அழுக்கையோ ஏற்படுத்தாததும், எளிதில் கழுவி அகற்றக்கூடியதுமான ஆமணக்கெண்ணைதான் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

காஸ்டரோமா கூந்தலை நீளமாகவும், பளபளப்பாகவும் வளர்க்கிறது.. பொடுகை அகற்றி கூந்தலை முற்றிலும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.




தயாரிப்பவர்கள் :

பவ்நகர் ஆயில் அண்டு கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,

தபால் பெட்டி 1611 - பம்பாய் 1.

ஸ்டாக்கிஸ்டுகள் :

மெஸர்ஸ் ராஜன் ஸ்டோர்ஸ்
41, நேதாஜி சுபாஷ் போஸ் ரோடு, தெப்பகுளம், திருச்சிராப்பள்ளி

மெஸர்ஸ் ராமகிருஷ்ணா ஸ்டோர்ஸ்
151-A, சின்ன கடைத் தெரு, சேலம்

மெஸர்ஸ் நெல்லை லாட்ஜ், திருநெல்வேலி ஜங்ஷன்



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர்: ரா.பி.சேதுப்பிள்ளை

## 63. திரு ஆப்பாடி

பசுவைப் பேணி வளர்ப்பது பாரத நாட்டின் பண்பாடு. பசுக்கள் மேய்வதற்கென்றே சில காடுகளை ஒதுக்கி வைத்தனர் பழங்கால மன்னர். மன்னர் விடும் காடுகளில் மழையால் முளைத்து வளரும் புல்லை மேய்ந்து, மாந்தர்க்கு நல்ல பாலைத் தரும் பசுவின் கருணையைப் புலவர்கள் பாடி மகிழ்ந்தார்கள்.

"விடுநிலை மருங்கில் படுபுல் ஆர்ந்து
நெடுநிலை மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்"

[விடுநிலம் - அரசனால் விடப்பட்ட நிலம்; படுபுல் - தானே உண்டாகிய புல்; ஆர்ந்து - மேய்ந்து; தீம்பால் - இனிய பால்]

பசுவிற்குத் தீங்கிழைத்தல் ஆகாது என்று மணிமேகலை பாடிற்று. பாலிற் சிறந்தது பசுவின் பால் என்பது இந் நாட்டுப் பழங் கொள்கை.

"பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ
பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ"

என்று முப்பாலாகிய திருக்குறளைப் புகழ்ந்துரைத்தார் ஒரு புலவர்.

பாற் பசுக்களைப் பரிந்து பேணிப் பாதுகாத்தான் பரந்தாமன்; அதனால் கோபாலன் என்ற பெயரும் பெற்றான். தென்னாட்டிலே மாடு மேய்க்கும் தொழிலை மேற்கொண்ட இடையர் கோபாலர் என்றும் கோவலர் என்றும் அழைக்கப்படுவர். அவர் வாழ்க்கையின் செம்மையைச் சிலப்பதிகாரம் வியந்து பாடிற்று.

"ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடில்லை"

[ஆ - பசு; ஆப்பயன் - பால் முதலியன]

என்று பாடினார் இளங்கோவடிகள். அந்நாளில் வாழ்ந்த கோவலர் சூதும் வாதும் அறியாதவர்; பாலைச் சுருக்கி நீரைப் பெருக்கும் பழக்கமற்றவர்; துள்ளி விளையாடும் பாற் கன்றுகளைத் தோற் கன்றுகளாக்கும் வகை தெரியாதவர்.

சோழ நாட்டில் உள்ள மண்ணியாற்றின் கரையிலே பசும்புல் நிறைந்த படுகை உண்டு. முன்னாளில் பசுக்குலம் அங்கே செழித்து வளர்ந்தது. அதனால் ஆப்பாடி என்ற பெயரும் அதற்கு அமைந்தது.

மண்ணியாற்றின் தென்கரையில் அழகிய சோலையின் நடுவே நின்ற ஆப்பாடியைக் கண்டு மகிழ்ந்தார் திருநாவுக்கரசர்.

"மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த
மண்ணித்தென் கரைமேல்மன்னி
அந்தமோடு அளவிலாத
அடிகள்ஆப் பாடியாரே"

என்று அப்பதியில் எழுந்தருளிய ஈசனைப் போற்றினார். திரு ஆப்பாடியைச் சுற்றியிருந்த பல ஊர்களிலிருந்தும் பசுக்கள் அங்கு வந்து வயிறார மேய்ந்து அந்திப் பொழுதில் மீண்டு செல்வது வழக்கம்.

அத்தகைய ஊர்களில் ஒன்று சேய்நலூர் என்னும் மூதூர். சேய் என்றும், சேயோன் என்றும் செந்தமிழ் நூல்களில் குறிக்கப்படும் முருகப் பெருமானுடைய பெயர் தாங்கி நிற்பது அந் நல்லூர். சோழ மன்னர் முடி சூட்டிக் கொள்ளும் ஊர்.

"பண்ணின் பயனும் நல்லிசையும்
பாலின் பயனும் இன்சுவையும்
கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும்
விண்ணின் பயனும் பொழிமழையும்
வேதப் பயனும் சைவமும்போல்
மண்ணின் பயனும் அப்பதியின்
வளத்தின் பெருமை வரம்புடைத்தோ"

என்று அந்நகரின் சிறப்பினை உணர்த்தினார் சேக்கிழார் பெருமான்.

அவ்வூரிலே வாழ்ந்தான் ஓர் இளைஞன்; அவன் அருங்கலைச் செல்வன்; அருள் நிறைந்த மனத்தினன். ஒரு நாள் அவன் தெரு வழியே சென்று கொண்டிருக்கையில் கன்றை ஈன்ற பசு வொன்றை இடையன் பெருங் கழியால் அடித்து வருத்துவதைக் கண்டான்; இரக்கம் கொண்டான். இடையன் கொடுமையைத் தடுத்தான்; பசுக் குலத்தின் பெருமையை எடுத்துரைத்தான்.

அவ்வுரை கேட்டுத் திகைத்து நின்ற ஆயனை நோக்கி, "இப் பசு மந்தையை இனி, நாள்தோறும் நானே ஆப்பாடியிற் கொண்டு மேய்த்து வருவேன்" என்றான். ஆயனும் அதற்கு இசைந்து அகன்றான்.

அன்று முதல் விசார சருமன் என்னும் அவ் இளைஞன் மாடு மேய்க்கும் பணியை மேற்கொண்டான்; பசும்புல் நிறைந்த இடம் பார்த்துப் பசுக்களை மேயவிட்டான்; எட்டாத இடங்களிற் கிடந்த புல்லை வெட்டிக் கொணர்ந்து அவற்றின் முன்னே இட்டான். மண்ணியாற்றின் துறையிலே மாசற நீராட்டினான்: கண்ணிணைக் காக்கும் இமைபோல் அவற்றைக் கண்காணித்தான்.

நாளடைவில் மந்தை செழித்தது; அவன் சிந்தை இளைத்தது.

"ஆய நிரையின் குலமெல்லாம்
அழகின் விளங்கி மிகப்பல்கி
மேய இனிய புல்லுணவும்
விரும்பு புனலும் ஆர்தலினால்
ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி
எய்தி இரவும் நண்பகலும்
தூய தீம்பால் மடிபெருகிச்
சோரிய மடிகள் சுரந்தனவால்"

[நிரை - மந்தை; பல்கி - பெருகி; புனல் - தண்ணீர்]

என்று பால்வளம் பெருகிய பான்மையைப் பெரிய புராணம் பாடிற்று.

கருணை வடிவாகிய இளைஞனைக் காணுந்தோறும் பசுக்களின் அன்பு சிறந்தது; பால் சுரந்தது. மணலிலே பாய்ந்தது. இவ்வாறு மண்ணிற் கலந்து பாழாகும் பசுவின் பாலை மாதேவன் பூசைக்குப் பயன் படுத்த ஆசையுற்றான் அப் பையன். உடனே ஆற்றங்கரையில் நின்ற ஆத்தி மரத்தின் அடியில் மணலால் ஒரு உருவம் அமைத்தான்; மண்ணால் அதைச் சுற்றிக் கோயிலும் மதிலும் எடுத்தான். பசுக்கள் சொரிந்த பாலைக் குடங்களில் ஏந்திப் பரம் பொருளை முழுக்காட்டி, இன்ப வெள்ளத்தில் மூழ்கினான். இவ்வாறு நாளும் ஈசனுர்க்குப் பால் முழுக்கு நடைபெற்றது.

இச் செய்தியைக் கேள்வியுற்ற சேய்ஞலூர் மாந்தர் சீற்றமுற்றனர். பசு மேய்ப்பதாகச் சொல்லிப் பாலைக் கறந்து பாழாக்குகிறான் விசாரசருமன் என்று அவன் தந்தையிடம் குறை கூறினர். மைந்தன் செய்கையறிந்த தந்தை மனம் வருந்தினான். சிறியோன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுமாறு பணிந்து வேண்டினான்.

மறுநாள் மறைவாக மாட்டு மந்தையைப் பின் தொடர்ந்தான் தந்தை. மைந்தன் அறியாமல் ஒரு மரத்தில் ஏறி ஒளிந்திருந்தான். வழக்கம்போல் பசுக்களை மேய விட்டு மண்ணியாற்றில் நீராடினான் இளைஞன்; மெல்லிய மலர்களும், தளிர்களும் கொய்தான்; பசுக்கள் சொரிந்த பாலைக் குடங்களில் நிறைத்தான். மணலைக் குவித்து மாதொரு பாகனைப் பாவித்து ஒருமையுடன் இருந்து வழிபாடு செய்யத் தலைப்பட்டான்.

அக்காட்சியைக் கண்டபோது பொறுமை இழந்தான் தந்தை; பொல்லாத கோபமுற்றான்; பெருங்கிளை யொன்றைப் பறித்து ஓடி வந்து பையனைப் பன்முறை அடித்தான். பாற்குடங்களைக் காலால் இடறிக் கவிழ்த்தான். அந் நிலையில் பூசை கலைந்தது. தகாத செயல் செய்த தந்தையின் கால்களை ஒரு கோலால் அடித்துத் துணித்தான் இளைஞன். அங்கேயே விழுந்து தந்தை இறந்தான்.

தவறு செய்தவன் தந்தையே ஆயினும் தயங்காது ஒறுத்த மைந்தனை மாநிலம் வாயார வாழ்த்திற்று. மங்கை பங்கனும் மனம் மகிழ்ந்து அவனுக்குச் சண்டீசப் பதம் அளித்துத் திருத்தொண்டர் குலத்திற்குத் தலைவனாக்கினான். அன்று தொட்டுச் சண்டேசுரர் என்று போற்றப்படும் இத் தொண்டர் பெருமையைத் தேவாரமும் புகழ்ந்து பாடிற்று.

"பீரடைந்த பாலதாட்டப்
பேணாத வன்தாதை
வேரடைந்து பாய்ந்ததாளை
வேர்த்தடிந் தான்தனக்கு
தாரடைந்த மாலைசூட்டித்
தலைமை வகுத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு
சேய்ஞலூர் மேயவனே"

என்பது சம்பந்தர் திருப்பாசுரம். ஈசன் உமையம்மையோடு இனிதமர்ந்து, வலது திருவடியில் சண்டீசரை வைத்து, அவர் முடிமீது மலர்மாலை சூட்டி, சண்டீசப் பதம் அளிக்கும் சிற்பத்தைக் கங்கை கொண்ட சோழேச்சரத்தில் இன்றும் காணலாம்.

## உங்கள் விருப்பத்திற்கேற்ற அழகு

உங்கள் சருமத்தை இளமையுடனும், உள்ள துடிப்புடனும், புதுமையோடு கவர்ச்சிகரமாயும் வைத்திருங்கள். இயற்கை எழிலின் மோஹன தோற்றத்தைப் பெறுங்கள் "'ஹாஸலீன்' ஸ்னோ" உங்கள் சருமத்தை குளிர்மையாயும் லாவண்யத்துடனும் வைக்கிறது.




# "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

## "'ஹாஸலீன்' ஸ்னோ"

(டிரேட் மார்க்)



பர்ரோஸ் வெல்கம் அண்டு கம்பெனி (இந்தியா) லிமிடெட்

பி. ஓ. பாக்ஸ் 290, பம்பாய்




# சொறிநாய்



காமசமுத்திரம் என்கிற கிராமத்தில் ராமகிருஷ்ணஞ் செட்டியார் பணக்காரர். அந்த ஊரில் பாதி நிலம் அவருடையது. அவருடைய மெத்தை வீடு ஒன்றுதான் அந்த ஊரில் சுண்ணும்பில் கட்டிய வீடு. மீதியெல்லாம் குச்சுவீடுகள்.

அந்த ஊரில பல நாய்கள் தெருவில் எச்சில் இலைகளை நக்கிப் பிழைத்து வந்தன. இரவு முழுதும் கத்திக்கொண்டிருக்கும். கன்னக்கோல்த் திருடர்கள் அந்த ஜில்லாவில் அதிகம். ஆனால் அவர்கள் காமசமுத்திரத்தண்டை வரமாட்டார்கள். நாய்கள் குலைக்கும். காரியம் நடைபெறாது என்று அந்த ஊரை அவர்கள் விட்டு விட்டார்கள். வேறு ஊர்களில் அவ்வப்போது ஏதாவது சம்பாதிப்பார்கள். ரொம்பக் காலத்துக்கு முந்தி நடந்த கதை. இப்போது அந்த ஜில்லாவில் கன்னக் குறவர்கள் இல்லவே யில்லை.

ஒரு சொறி நாய் எப்போதும் செட்டியார் வீட்டுத் திண்ணைமேல் படுக்கும். செட்டியாரின் கடைசி மகன் தான் சாப்பிட்ட இலையை அவனே கொண்டு வந்து வாசலில் போடுவான். அதில ஒரு பிடி சோறு மீத்தி யிருப்பான். இலையில் உள்ள நெய்யையும் நாய் மிக ஆவலாக நக்கும். அந்த நாய் எப்போதும் அங்கேயே படுக்கும். பெரிய செட்டியாரும் அவருடைய வேலைக்காரர்களும் எவ்வளவோ பார்த்தார்கள். அதன் மேல் கல்லை வீசித் துரத்துவார்கள். அது கத்திக் கொண்டு ஓடிப் போகும். அவர்கள் திரும்பிக் கதவு சாத்தினதும் அது மறுபடியும் வந்து அங்கேயே திண்ணையில் படுத்துக் கொள்ளும்.

ஒரு புதுக் குறக் கூட்டம் வந்தது. பகலில் மூங்கில் சீவிக் கூடையும் பாயும் முடைவார்கள். நாய்களை மெள்ளச் சிநேகம் செய்தார்கள். பிறகு அவர்களைக் கண்டு குலைத்தாலும் மெதுவாகத் தான் குலைக்கும்.

அன்றிரவு அமாவாசை தீர்ந்து மூன்றாம் நாள் ஞாயிற்றுக்கிழமை. ராத்திரி ராகி ஒட்டப்பம் எறிந்து நாய்களை ஏமாற்றிவிட்டார்கள். அவை சத்தம் போடவில்லை. இரண்டு சாப்பிடும் வெங்கலத் தட்டுகள் ஒரு வீட்டில்



எடுத்தார்கள். இன்னொரு வீட்டில் இரண்டு கோழிகளைப் பிடித்துப் பையில் போட்டுக் கொண்டார்கள். கடைசியாக, செட்டியார் வீட்டண்டை வந்தார்கள். சொறி நாய் குலைத்தது. ஓட்டப்பத்தை விண்டு எறிந்தார்கள். ஆனாலும் நாய் குலைத்துக் கொண்டே யிருந்தது. செட்டியார் விழித்துக் கொண்டு "இந்தப்பாழும் நாயால் தூங்கவே முடியாமலிருக்கிறது" என்று வெளியே வந்து தடியால் நாயை அடித்தார். நாய் பெருங் கூக்குரலிட்டுக் கொண்டு ஓடிப் போயிற்று. பிறகு கதவை மூடிக் கொண்டு படுத்தார். செட்டியார் தம் மனைவியுடன் பேசிக் கொண்டிருந்த படியால் பதுங்கி யிருந்த திருடர்கள் இங்கே இனி வேலை நடக்காது என்று போய் விட்டார்கள்.

வழக்கம் போல் மறுநாள் செட்டியார் மகன் தான் சாப்பிட்ட இலையை எடுத்து வந்தான். நாய் வாலை ஆட்டிக் கொண்டு தயாராக வந்தது.

"உன்னால்தான், சேஷா! இந்த நாயின் உபத்திரவம்" என்றார் பக்கத்தில் கை அலம்பிக் கொண்டிருந்த செட்டியார்.

"பாவம்! வால் ஆட்டிக் கொண்டு வருகிறது. அப்பா! நாய்க்குப் புண் வந்தால் மருந்து இல்லையா?" என்றான் சேஷன்.

ராஜாஜி

"மருந்து எடுத்து நாய்க்குத் துடைப் பாய் போலிருக்கிறது. நன்றாய்ப் போச்சு!" என்றார் செட்டியார்.

* * *

சொறி நாயின் உண்மை உபத்திரவம் அந்தக் குறக் கூட்டத்துக்கு அல்லவோ தெரியும்! செட்டியார் என்னத்தைக் கண்டார்!

போனிக்ஸ்

டிலெக்ஸ்

பங்காக்கள்





ஆஹா !
என்னே
ஆச்சரியம் !

Phoenix

De-Luxe

அது என்னை இளைஞன் போல் மாற்றிவிட்டதே!

EWI LTD

THE ENGINEERING WORKS OF INDIA LTD.
20, ULTADANGA ROAD, CALCUTTA 4

E.W.I.-4/56

பூரண தென்னிந்திய ஏஜெண்டுகள்

RM. S. & CO., LTD.

16, பிராட்வே, சென்னை -1

கிளை :

5, மேலகோபுரவாசல் வீதி, மதுரை

ஸிரோலின்

உங்கள்
இருமலின்
மூலகாரணத்தை
நிறுத்துகிறது

...நீங்கள் இருமுவதை
நிறுத்த மட்டுமல்ல
அது செய்வது

ஸிரோலின் உங்கள் இருமலுக்குக் காரணமான அபாயகர கிருமிகளை ஒழிக்கிறது

இருமலுக்கு
அபாயமற்ற
குடும்ப
ஔஷதம்




VT.1276




## 37. ரமணியின் பிடிவாதம்!

குகைக்கு ரமணி வந்து அன்றுடன் மூன்று நாட்களாகி விட்டன. அன்று ரமணியும், சுந்தரமும் தங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது, குகையிலுள்ள இரும்புக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. சத்தத்தைக் கேட்டதும், இருவரும் பேச்சை நிறுத்தி விட்டு எழுந்து நின்று எதிரே பார்த்தார்கள். முரடர்கள் நால்வரும் ஒருவன் பின் ஒருவனாக உள்ளே வந்தார்கள். உள்ளே வந்ததும், தலைவன் ஒரு காகிதத்தையும், பேனாவையும் எடுத்துக் கொண்டு ரமணியின் அருகிலே சென்றான்.

"தம்பி! உன் அப்பா பலே ஆளாக இருக்கிறாரே! நீ இங்கு இருப்பதாக அவருக்கு எழுதி யிருந்தேன். ஆனால் அவர் நம்பவில்லை. உன் கைப்பட ஒரு கடிதம் எழுத வேண்டுமாம். அந்தக் கடிதத்தைப் பார்த்த பிறகுதான், அவர் உன்னை அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்வாராம்..."

"என்ன? அப்படியா சொன்னார் அவர்!" என்றான் ரமணி வியப்புடன்.

"ஆமாம் தம்பி, ஆமாம். அவர் எழுதிய பதில் கூட இதோ இருக்கிறது. நீயே படித்துப் பார்" என்று கூறி ஆலமரப் பொந்தில் சிற்சபேசன் எழுதி வைத்த கடிதத்தை ரமணியிடம் காட்டினான் தலைவன்.

ரமணி அதைப் படித்துப் பார்த்ததும், "ஆ! பத்தாயிரமா? அவ்வளவு பெரிய தொகை கொடுத்தால்தான் என்னைத் திருப்பிக் கொண்டு போய் விடுவீர்களா? இது அக்கிரமம்! அநியாயம்!" என்று பலமாகக் கத்தினான்.

"அடேயப்பா! அப்பா தருவதா யிருந்தால் கூடப் பிள்ளையாண்டான் வேண்டாம் என்பான் போலிருக்கிறதே!" என்று கேலியாகக் கூறினான் அந்த முரட்டுத் தலைவன்.

"அவர் என் அப்பாவுமில்லை, நான் அவருடைய மகனும் இல்லை. நான் ஓர் அனாதை. அனாதையான என்னை இவ்வளவு நாளாக அவர் காப்பாற்றி வந்ததே பெரிய காரியம். இனிமேலும் அவர் எனக்காகப் பத்தாயிரம் கொடுப்பதா? வேண்டாம். வேண்டவே வேண்டாம். நான் கடிதம் எழுதித் தரமாட்டேன். தர முடியாது" என்று உறுதியாகச் சொன்னான் ரமணி.

இதைக் கேட்டதும் தலைவனுக்குக் கோபம் வந்து விட்டது. "டேய் பையா! நீ யாரை ஏமாற்றப் பார்க்கிறாய்? நீயா அனாதை? எல்லாம் எனக்குத் தெரியும். வீணாக ஆபத்தைத் தேடிக் கொள்ளாதே! இதோ, இதில் நான் சொல்வது போல் எழுதிக் கொடு" என்று கூறிக் காகிதத்தையும் பேனாவையும் ரமணியின் முன்னால் நீட்டினான் தலைவன்.

ரமணி அதை வாங்கவில்லை. "என் உயிருக்கே ஆபத்து வந்தாலும் சரி; கடிதம் எழுதித் தரமாட்டேன். எனக்காக இன்னொருவர் எதற்காகப் பணம்—அதுவும் பத்தாயிரம் தர வேண்டும்? முடியாது. எழுத முடியாது" என்று திரும்பவும் ஆணித்தரமாகப் பதில் சொன்னான்.

"முடியாதா? சரிதான்! காரியம் அவ்வளவு தூரத்துக்கு முற்றி விட்டதா? பார், உன்னை இப்போதே கடிதம் எழுத வைக்கிறேன்" என்று மிகவும் கோபமாகக் கூறிக் கொண்டே அங்கிருந்த ஒரு நீண்ட பிரம்பைக் கையில் எடுத்தான். "இப்போது என்ன சொல்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே பிரம்பை ஓங்கினான். பிரம்பைக் கண்டு

## பூனை வீட்டில் திருவிழா!

பூனையாரின் வீட்டிலே
பொழுது புலரும் வேளையில்
ஆனைத் தந்தம் போலவே
அழகுப் பிள்ளை பிறந்தது!

குழந்தை பிறந்த மகிழ்ச்சியால்
கூவிக் கூவிப் பூனையார்
அழைத்து நின்றார் விருந்துண்ண
அருமைத் தோழி தோழரை.

தவளையாரும் கூடவே
தத்தித் தத்தி வந்திட்டார்
கவலையின்றி எலியாரும்
கையை வீசி வந்திட்டார்.

அரிசி வெல்லம் தேங்காயால்
அருமைப்பொங்கல் பொங்கியே
விருந்து வைத்தார் பூனையார்
விழைந்து வந்த தோழர்க்கு!

விருந்து முடிந்து நாட்டியம்
வீரம் விளைக்கும் நாடகம்
அருமையான பாட்டோடு
அன்று விழா முடிந்தது!

—"அப்துல்"

ரமணி பயப்படவில்லை. அசையாமல் அங்கேயே நின்றான்!

பிரம்பை ஓங்கிய போதும், ரமணி அசையாமல் நிற்பதைக் கண்ட தலைவனுக்குக் கோபம் அபாரமாக வந்து விட்டது. "என்ன ஆணவம் இந்தப் பையனுக்கு!" என்று கூறிக் கொண்டே பிரம்பால் ரமணியின் காலிலே இரண்டு அடி கொடுத்தான். அடி விழுந்த இடம் வலிக்கத்தான் செய்தது. ஆனாலும் ரமணி பல்லைக் கடித்துக்கொண்டு அப்படியே நின்றான். தலைவனின் ஆத்திரம் அதிகமாகியது. "எழுதப் போகிறாயா? இல்லையா?" என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டே ரமணியின் வலது காலிலும் இடது காலிலும் மாறி மாறி அடித்தான். வலி தாங்க முடியாமல் ரமணி எழுதிக் கொடுத்து விடுவான் என்றே தலைவன் எதிர் பார்த்தான்.

ஆனால், ரமணி அடிக்குப் பயந்து சரணாகதி அடைந்து விடவில்லை. 'எழுதித் தர முடியாது' என்றே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான்.

ரமணியின் பிடிவாதம் அதிகமாக ஆகத் தலைவனின் ஆத்திரமும் அதிகமாகிக் கொண்டே வந்தது. அந்த ஆத்திரத்தில் அவன் ரமணியினுடைய கை, கால், முதுகு எல்லா இடங்களிலும் மாறிமாறி அடித்தான். ரமணியும் கண்ணீர் சொரிந்தபடி அடிகளை வாங்கிக் கொண்டு அந்த இடத்திலேயே நின்றான். எவ்வளவு நேரத்துக்குத் தான் அவனால் அப்படி நிற்க முடியும்? தலைவன் முதுகிலே பலமாக ஓர் அடி கொடுத்த போது, ரமணி 'ஐயோ!' என்று அலறிக் கொண்டே கீழே சாய்ந்து விட்டான்.

அதே சமயம், இவ்வளவு நேரமாக நடந்ததையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த சுந்தரம் 'குப்' பென்று பாய்ந்து தலைவனின் எதிரே வந்து நின்றான். "ஐயா! ரமணி மிகவும் நல்லவன். அவனை இப்படி மாட்டை அடிப்பது போல் அடிக்கிறீர்களே! தயவுசெய்து நிறுத்துங்கள்" என்று தடுத்துச் சொன்னான்.

"அடேயப்பா! அந்த நல்ல பையனுக்கு இந்த நல்ல பையன் சிபாரிசா?" என்று கேலியாகக் கேட்டான் தலைவன்.

"ஐயா! அவனை இதற்குமேல் அடித்தால், அவன் உயிரே போனாலும் போய் விடும். உயிர் போய்விட்டால், உங்களுக்குப் பணம் எப்படி வரும்? தயவுசெய்து இப்போது அவனைச் சும்மா விட்டு விடுங்கள். காலையில் நான் எப்படியாவது சமாதானப்படுத்திக் கடிதம் வாங்கித் தருகிறேன்" என்றான் சுந்தரம்.

"நிச்சயமாகவா? சரி, நாளைக் காலையிலும் அவன் இதேபோல் தகராறு செய்தானோ, அப்புறம் நான் சும்மா இருக்க மாட்டேன்" என்று கூறி, பிரம்பை ஒரு மூலையில் எறிந்து விட்டுச் சாப்பிடச் சென்றான் தலைவன்.

அன்று இரவு குகையில் எல்லோரும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தார்கள். ஆனால், ரமணிக்கு மட்டும் தூக்கம் வர

# போக்கு வரத்து ஸ்தாபனங்களே!





## டயர்ஸோல்ஸ்

### பரிசீலனை செய்யுமுன் தேய்ந்த டயர்களை எறிந்துவிடாதீர்கள்

டயர் உற்பத்தியாளர்கள் தற்காலம் தயாரித்து வரும் டயர்கள், மனிதனுடைய சிருஷ்டித் திறமையின் முழுச் சிறப்பும் வெளிப்படும்படி அமைந்தவை. டயரின் டிரெட் பாகம் தேய்வதற்குள் டயரைப் புதுப்பித்துக் கொள்வது தேச நலனுக்கு இன்றியமையாத செயலாகும்.

டயர்ஸோல்ஸ் பொதுமக்களிடம் அவர்களுக்குள்ள பொறுப்பை உணர்ந்தவர்களாதலால் பொதுஜன பாதுகாப்பு விஷயத்தில் சந்தேகமுள்ளதாகக் கருதப்படும் டயர்களைத் தயங்காமல் நிராகரித்து விடுவர். இவ்வித நிராகரணத்திற்குக் காரணம், கோணல் புத்தியல்ல இதனால் பாதகமடையக் கூடிய எல்லா அம்சங்களையும் கருதியே செய்யப்படுகிறது.

டிரெட் பாகம் தேய்ந்தாலும் உறுதியான உறையுடைய டயரை ஒதுக்கி விடுவது வீண் நஷ்டமுண்டாக்கும். தேய்ந்து மழு மழுப்பான டயர்கள் மதிப்புடையவை. டயருக்குமேல் டயர்ஸோல்ஸ் டிரெட் பொருத்தப்பட்டு விட்டால் புது டயர் உழைக்கும் காலத்திற்கு திரும்பவும் உழைக்கின்றது. இன்னொரு முக்கிய விஷயம், புதிய டிரெட் பொருத்தப்படும்போது பழைய உறை (கேஸிங்) சேதமாவதில்லை. எனவே டயர்ஸோல்ஸ் டிரெட் தேய்ந்த பிறகுகூட மீண்டும் உபயோகமாகின்றது.



டயர்ஸோல்ஸ், டயர் பராமரிப்பு பிரச்னைகளை தீர்ப்பதில் ஒவ்வொரு டயர்மைலுக்கும் செலவு மிக மிகக் குறைவு.

**டயர்ஸோல்ஸ்**
ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிட்.
கோயமுத்தூர்

தொழிற்சாலைகள் இருக்குமிடம்: திருச்சிராப்பள்ளி ரோடு, கோயமுத்தூர் ● 89, லைடன்ஹாம்ஸ் ரோடு, ஆவடி, மதராஸ்; டிப்போ: 7/1, பட்டுல்லோஸ் ரோடு, சென்னை ● என். எஸ். எச். மவுண்ட் போஸ்ட் ஆபீஸ், கோட்டயம் ● 13/90, பதி தெரு, விஜயவாடா ● 5, ஹைட் ரோடு, கிதர்பூர், கல்கத்தா

புதிய டிரெட்டின் பக்கங்களில் **TYRESOLES** என்ற டிரேட் மார்க் இருக்கிறதா என்று கவனித்து வாங்கவும்

வில்லை. அடி விழுந்த இடங்களைத் தன் கைகளால் நன்றாகத் தடவி விட்டுக் கொண்டிருந்தான்.

மணி பன்னிரண்டுக்குமேல் இருக்கும். அப்போது ரமணியின் பக்கத்தில் படுத்திருந்த சுந்தரம், மெதுவாகக் கண்களை விழித்தான். ரமணியைத் தவிர மற்ற எல்லோரும் தூங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. அப்போது அவர்கள் தலைப் பக்கமாகப் படுத்திருந்த சுப்பையா என்பவன் கொஞ்சம் அசைவதுபோல் அவனுக்குத் தெரிந்தது. 'இவன் விழித்துக் கொண்டிருக்கிறானோ!' என்று சந்தேகப்பட்டு, சுந்தரம் அவனையே சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால், அவன் மறுபடி அசையவில்லை. ஆகையால், அவன் மிகவும் நன்றாகத் தூங்குகிறான் என்று முடிவு செய்துவிட்டுச் சுந்தரம் ரமணியின் உடம்பில் அடி விழுந்த இடங்களைத் தடவிக் கொடுத்துக்கொண்டே "ரமணி! நீ ஏன் இப்படிப் பிடிவாதம் செய்கிறாய்? பேசாமல் அவர்கள் சொன்னபடியே நீ எழுதிக் கொடுத்துவிடேன்!" என்றான்.

"சுந்தரம், சிற்சபேசன் என் சொந்த அப்பா என்பதை நீயும் நம்புகிறாயா? அவர் எனக்கு அப்பாவுமில்லை; நான் அவருக்கு மகனும் இல்லை. அவர் தூரத்து உறவினர்கூட இல்லை."

"நிஜமாகவா ரமணி?"

"சுந்தரம், இவர்கள் தான் என் பேச்சை நம்ப மாட்டார்கள். நீயாவது நம்புவாய் என்றே நினைக்கிறேன். நான் பிறந்தது வேலங்குறிச்சி என்ற ஊரில். மதுரைக்குப் பக்கத்திலே அது இருக்கிறது. நான் பிறந்ததும் என் அம்மா முத்துலட்சுமி ஜன்னி கண்டு இறந்துவிட்டாள். என் அப்பா வேலாயுதமும் கொஞ்ச காலத்துக்கு முன்னால் நாய் கடித்து இறந்து போனார்" என்று ஆரம்பித்துத் தன் கதையைச் சுருக்கமாகக் கூறி முடித்தான் ரமணி.

சுந்தரம், "ரமணி, நீ சொல்வதெல்லாம் உண்மை என்று நான் நம்புகிறேன். ஆனாலும், இவர்கள் நம்பமாட்டார்களே! இவர்களுக்குப் பணம் தான் குறி என்று தெரிகிறது. நீ பேசாமல் கடிதம் எழுதிக் கொடுத்துவிடு. சிற்சபேசனே பணம் தருவதாக எழுதியிருக்கிறாரே! நீ இங்கிருப்பதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் அவர் உன் கைப்படக் கடிதம் வேண்டுமென்கிறார். உன் கடிதம் போனால், சீக்கிரம் பணம் வரும். உனக்கும் சீக்கிரம் விடுதலை கிடைத்து விடும்" என்றான்.

"விடுதலை கிடைத்தால் எனக்கும் சந்தோஷம்தான். ஆனாலும் எனக்கு ஒரு சந்தேகம். இவர்கள் பணத்தை வாங்கிக் கொண்டு என்னைத் திருப்பி அனுப்பாமலே வைத்துக் கொண்டால்...?"

"ரமணி, அதுமாதிரி நடக்காது. இங்கேயே உன்னை வைத்துக் கொண்டால் உனக்குச் சாப்பாடு போட வேண்டாமா? கட்டாயம் பணம் வந்ததும் கொண்டு போய் விட்டு விடுவார்கள். தயவு செய்து எனக்காகவாவது நீ நாளைக்குக் கடிதம் எழுதிக் கொடுத்துவிடு."

"சரி, காலையில் பார்த்துக் கொள்ளலாம். பேசாமல் படுத்துக் கொள்" என்று கூறினான் ரமணி. சுந்தரம் படுத்துக் கொண்டான். ரமணியும் இரவு வெகு நேரம் விழித்திருந்ததால், அயர்ந்து தூங்கலானான்.

* * *

மறு நாள் காலை. பொழுது விடிந்தது. வழக்கம் போல் காமாட்சி அம்மாள் கோலப் பொடியைக் கையில் எடுத்துக் கொண்டு பங்களா வாசலை நோக்கி வந்தாள். வாசல் கதவைத் திறந்ததும், வராந்தாவில் யாரோ படுத்திருப்பதைக் கண்டாள். உடனே பரபரப்புடன், "யாரது?" என்று உற்றுப் பார்த்தாள். பார்த்ததும், "ஆ! ரமணி! என் ரமணியா!" என்று கூவிக் கொண்டே அருகிலே ஓடினாள். (தொடரும்)



ஸ்ரீ டி. எஸ். ரங்கநாதன் சமீபத்தில் மேல் படிப்புக்காக இங்கிலாந்துக்குச் சென்றிருக்கிறார். இவர் இண்டியிலுள்ள மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகத்தில் விசேஷ விஞ்ஞான அதிகாரியாகப் பணியாற்றி வந்திருக்கிறார். கொழும்புத் திட்டத்தின் கீழ் மேல் படிப்புக்காக உதவிச் சம்பளமும் வசதியும் பெற்று இங்கிலாந்து சென்றிருக்கும் ஸ்ரீ ரங்கநாதன் அங்கு லீட்ஸ் சர்வ கலாசாலையில் ஆராய்ச்சிகள் நடத்துவார் என்று அறிகிறோம். அவரது ஆராய்ச்சி வெற்றி பெற்றுப் புகழுடன் திரும்புவாராக!





# இளவரசன் ஐவான்

முன்னொரு காலத்தில் ருஷ்யாவை ஒரு ஸார் மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு மூன்று பிள்ளைகள். மூன்று பேரும் வளர்ந்து கல்யாணம் செய்து கொள்ள வேண்டிய பருவம் எய்தினர். அப்போது மன்னன் அவர்களை அழைத்து, "என் அருமைப் புதல்வர்களே, எனக்கோ வயசாகிறது. என் பேரன் பேத்திகளைப் பார்த்துவிட்டுக் கண்ணை மூடவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. நீங்கள் எல்லோரும் கால காலத்தில் கல்யாணம் செய்து கொள்ளுங்கள்!" என்றான்.

"உங்கள் விருப்பத்தை நிறைவேற்றத் தயாராய் இருக்கிறோம். நீங்கள் ஆசி கூறி அனுப்புங்கள். நாங்கள் யாரைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறீர்கள் என்பதையும் சொல்லுங்கள். நாங்கள் அப்படியே செய்கிறோம்" என்றனர் பிள்ளைகள்.

"நீங்கள் கையில் வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு ஒரு திறந்த வெளியாக இருக்கும் மைதானத்துக்குப் போங்கள். அங்கே நின்று கொண்டு ஒவ்வொருவரும் ஒவ்வொரு அம்பை எய்யுங்கள். அந்த அம்புகள் யார் யார் வீட்டில் விழுகின்றனவோ அந்தந்த வீட்டுப் பெண்ணை அந்தந்த அம்புக்குரியவர் மணந்து கொள்ளுங்கள். அந்தப் பெண்ணை மணப்பது தான் உங்கள் தலைவிதி என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள்" என்றான் அரசன்.

இதைக் கேட்ட பிள்ளைகள் தந்தையை வணங்கிவிட்டு, மைதானத்துக்குப் போய்,

வில்லை வளைத்து நின்றார்கள். வளைத்த வில்லில் அம்பைத் தொடுத்து நாணை இழுத்து விட்டார்கள். அம்புகள் காற்றை விட வேகமாகப் பறந்தன.

மூத்த மகன் விட்ட அம்பு ஒரு செல்வச் சீமான் வீட்டு முற்றத்தில் விழுந்தது. சீமானின் புதல்வி அந்த அம்பை எடுத்தாள். இரண்டாவது மகனுடைய அம்பு ஒரு வியாபாரியின் வீட்டில் விழுந்தது. வியாபாரியின் மகள் அந்த அம்பைப் பொறுக்கி எடுத்து வைத்துக் கொண்டாள். மூன்றாவது மகன் ஐவான் விட்ட அம்பு எங்கே போயிற்று என்றே தெரியவில்லை. அதைத் தேடிக்கொண்டு ஐவான் நடந்தான். அவன் நடந்த தூரம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. கடைசியில் சேறும் சகதியுமாக இருந்த ஒரு இடத்தை அடைந்தான். அங்கே ஒரு தவளை ஒரு இலையின்மீது உட்கார்ந்திருந்தது. அதன் வாயில் இளவரசன் ஐவான் விடுத்த அம்பு இருந்தது.

அதைப் பார்த்து, "தவளையே! தவளையே! தயவுசெய்து என் அம்பை என்னிடம் திருப்பிக் கொடுத்து விடேன்!" என்றான் இளவரசன் ஐவான்.

"அரசன் சொன்னபடி என்னைக் கல்யாணம் செய்து கொள்!" என்றது.

"நானோ மனிதன், நீயோ தவளை. உன்னை எப்படி நான் கல்யாணம் செய்து கொள்ள முடியும்?" என்றான் ஐவான்.

"அதற்கென்ன செய்வது? உன் தலைவிதி அப்படியிருக்கிறது. நீ என்னைக் கல்யாணம் செய்து கொண்டே தீரவேண்டும்" என்றது தவளை.

இதைக் கேட்டதும் இளவரசன் ஐவானுக்கு உண்டான வருத்தமும் ஏமாற்றமும் கொஞ்ச நஞ்சமல்ல. இந்த இக்கட்டான நிலையிலிருந்து தப்ப வழி அவனுக்குத் தெரியவில்லை. எனவே, அவன் தவளையை எடுத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்து சேர்ந்தான்.

அரண்மனையில் ஸார் மன்னன் தன் மூன்று புதல்வர்களின் கல்யாணங்களையும் வெகு சிறப்பாக நடத்தினான். மூத்த மகனுக்கும் செல்வச் சீமானின் புதல்விக்கும் திருமணம் நடைபெற்றது. அடுத்த மகனுக்கும் வியாபாரியின் மகளுக்கும் கல்யாணம் நடைபெற்றது. மூன்றாவது மகன் ஐவானுக்கும் தவளைக்கும் மணம் நடந்தேறியது.

* * *

ஒரு நாள் அரசன் தன் புதல்வர்களை அழைத்தான். "என் அருமைப் புதல்வர்களே! எனக்கு உங்கள் மனைவிமார்களின் கைத் திறனைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. அதற்கு ஒரு பரீட்சை வைத்திருக்கிறேன். நீங்கள் எல்லோரும் உங்கள் மனைவியரை எனக்கு நாளைக் காலைக்குள் தலைக்கு ஒரு சட்டை பின்னச் சொல்லி எடுத்துக் கொண்டு வாருங்கள்" என்றான்.

தங்கள் சம்மதத்தைத் தெரிவித்து, முதல் இரண்டு குமாரர்களும் சென்றார்கள். மூன்றாவது குமாரன் ஐவான் வீட்டுக்கு வந்து சோகமே உருவமாய்

மொழிபெயர்ப்பு:
எஸ்.வி.எஸ்



ஒரு மூலையில் உட்கார்ந்து விட்டான். தவளை தத்தித் தத்தி ராஜகுமாரன் ஐவானிடம் வந்து, "இளவரசே! ஏன் இன்று இவ்வளவு வருத்தத்தோடு உட்கார்ந்திருக்கிறீர்கள்? உங்களுக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்று கேட்டது.

"நான் என்ன வென்று சொல்வேன். என் தகப்பனார் ஒரு வேலை வைத்திருக்கிறார். நீ நாளைக் காலைக்குள் அவருக்கு ஒரு சட்டை பின்னித் தரவேண்டுமாம். உன்னால் எப்படிப் பின்ன முடியும்? நான் என்ன செய்வேன்?" என்று அழ மாட்டாக் குறையாகச் சொன்னான்.

"இதற்காக உள்ளம் சோராதீர்கள், இளவரசே! இன்றிரவு நிம்மதியாகப் படுத்துத் தூங்குங்கள். ராத்திரி ஏதாகிலும் வழி புலப்படுகிறதா என்று பார்க்கிறேன். ஏனெனில் தந்திரங்களுக்குத் தாய் இரவு தானே?" என்றது தவளை.

இளவரசன் ஐவான், தன் மனைவி தவளை சொற்படி படுக்கச் சென்று விட்டான். அவன் நன்றாகத் தூங்கி விட்டானா என்பதை நிர்ணயம் செய்து கொண்டது தவளை. பிறகு அந்த அறையின் கதவு வரை தத்தித் தத்திச் சென்றது. வெளியில் யாருமில்லை என்று தெரிந்தவுடன், தன் தவளை உருவத்தைக் களைந்து விட்டு அழகிய பெண் உருவத்தையெடுத்துக் கொண்டது. ஆம்; அவள்தான் எல்லா உலகுமே வியந்து போற்றும் புத்திசாலியான வாஸிலிஸா.



தன் சொந்த உருவத்தை எடுத்துக் கொண்ட வாஸிலிஸா தன் கைகளைக் கொட்டினாள். "என் தோழிகளே! என் தாதிமார்களே! சீக்கிரம் வாருங்கள். என் தகப்பனார் போட்டுக் கொள்வதைப் போன்றதோர் அழகிய சட்டையைப் பொழுது விடிவதற்குள் பின்னிக் கொடுங்கள். சீக்கிரம் என்று சொன்னேனே என்று அவசரத்தில் கன்னா பின்னா வென்று பின்னிவிடப் போகிறீர்கள். நிறுத்தி, நிதானமாக மன்னரே மயங்கிப் போகும் வண்ணம் நன்றாகப் பின்னிக் கொடுங்கள்" என்றாள்.

மறு நாள் காலை பொழுது விடிந்தது. இளவரசன் படுக்கையை விட்டு எழுந்தான். தவளை எப்பொழுதும் போல் தரையில் தத்தித் தத்திப் போய்க் கொண்டிருந்தது. ஆனால் அவன் பார்வை மேஜையின் மீது விழுந்தபோதுதான் கண்கள் ஆச்சரியத்தால் அகல விரிந்தன. ஏனெனில் பட்டுத் துண்டில் ஒரு அழகான சட்டை சுற்றி வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுது ஐவான் அடைந்த மகிழ்ச்சி இவ்வளவு அவ்வளவல்ல. அதை எடுத்துக் கொண்டு நேரே தன் தந்தையிடம் சென்றான்.

ஐவான் சென்றபோதுதான் அவன் அண்ணன்மார் இருவரும் தங்கள் மனைவியர் பின்னிய சட்டைகளை அரசனுக்குக் காண்பித்துக் கொண்டிருந்தனர். அவற்றைப் பார்த்த அரசன் மூத்தவன் கொடுத்த சட்டையைப் பற்றி, "இது என் வேலைக்காரன் போட்டுக் கொள்ளத்தான் தகுதி" என்றான். இரண்டாவது மகன் கொடுத்த சட்டையைப் பார்த்து விட்டு, "இது நான் குளிக்கப் போகும் போது போட்டுக் கொண்டு போகலாம். அதற்குத்தான் தகுதி" என்றான்.

இளவரசன் ஐவான் தான் கொண்டு வந்திருந்த சட்டையைக் கொடுத்தான். தங்கம், வெள்ளிச் சரிகைகளில் பூவேலைகள் செய்திருந்த அந்தச் சட்டையைப் பார்த்த உடனேயே, "சட்டை என்றால் இது வன்றோ சட்டை! இதை நான் விசேஷ தினங்களில்தான் போட்டுக் கொள்வேன்!" என்று பெருமிதத்தோடு கூறினான்.

இதைக் கேட்டதும் மூதலிரண்டு ராஜ குமாரர்களுக்கும் சொல்லி முடியாத அவமானமாகப் போய் விட்டது. முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வீடு திரும்பினர். வழியில் இருவரும் "ஒரு காரணமுமின்றி ஐவானின் மனைவியைப் பரிகசித்தோமே! நமது பரிகாசச் சிரிப்புக்கெல்லாம் பொருளே கிடையாது என்பது இப்பொழுதல்லவா தெரிகிறது. உண்மையில் அவள் தவளையே யல்ல, மாய வித்தைக்காரிபோலிருக்கிறது" என்று பேசிக் கொண்டு வீடு திரும்பினர்.

* *

இன்னொரு நாள். ஸார் அரசன் மீண்டும் தன் புதல்வர்களை அழைத்தான். "உங்கள் மனைவிமார்களின் சமைக்கும் திறமையைப் பார்க்க வேண்டும். எங்கே அவர்களை நாளைக் காலைப் பலகாரத்துக்கு எனக்கு ரொட்டி செய்து தரச் சொல்லுங்கள்" என்றான்.

இதைக் கேட்ட ஐவான் வருத்தத்தோடு வீட்டுக்குத் திரும்பினான்.

"இளவரசே! உங்களுக்கு என்ன துன்பம் நேர்ந்தது? ஏன் உங்கள் முகத்தில் வருத்தக் குறிகள் காணப்படுகின்றன?" என்றது தவளை.

"என் தந்தை நாளைக் காலைக்குள் உன்னை ரொட்டி தயார் செய்யச் சொல்லியிருக்கிறார். அதை நான் அவரிடம் கொண்டு போய்ச் சேர்ப்பிக்க வேண்




LACTOGEN
NESTLE'S
அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்
லாக்டோஜனில் வளருகிறான்.
LG/G/16
தாய்ப்பால் போதிய அளவில் இல்லாதபொழுது
லாக்டோஜனை நம்புங்கள்.
இலவசமான புத்தகத்திற்கு கூப்பனைப் பூர்த்தி செய்து நெஸில்ஸ் புராடக்ஸ் (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி நெ. 180. மதராஸ் என்ற விலாசத்திற்கனுப்பவும்.
16
பெயர்……………………………………
விலாசம்……………………………………
……………………………………

# பிரஷ் - கிர்லோஸ்கர்

## எலெக்ட்ரிக் மோட்டார்கள்

BRUSH
KIRLOSKAR

ELECTRIC MOTORS



இப்படம் 20 HP 1500 RPM வரை தயாராகும் TK டைப் மோட்டார்

## மோட்டார்கள் 350 HP வரையில்

மேலே படத்திலுள்ள TK டைப் மோட்டார்கள் ஈரமான அல்லது தூசி, அழுக்குப் படியக் கூடிய பவுண்டரிகளிலும் கல் பட்டறைகளிலும் சிமெண்ட், காகிதம், எஃகு தொழிற்சாலைகளிலும் மாவு மில்களிலும் கடின வேலை செய்வதற்கு மிக உபயோகமானவை. விற்பனைக்குப் பிறகு அளிக்கப்படும் சேவை ஒரு விசேஷ அம்சம்.

தயாரிப்பாளர்கள்:

**KIRLOSKAR KE ELECTRIC**

KIRLOSKAR ELECTRIC COMPANY LIMITED, BANGALORE-3.

SOLE AGENTS PARRY & CO. LIMITED

GRANT

டும். கவலைப்பட இதைவிட வேறு என்ன வேண்டும்?" என்றான் ஐவான்.

"இளவரசே! இதற்காக இவ்வளவு வருத்தப்பட வேண்டாம். போய்ப் படுத்துக் கொள்ளுங்கள். ஏதாகிலும் ஒரு வழி புலப்படும். யோசனைகளுக்கு இரவுதான் தாயார்!" என்றது.

மூத்த ராஜகுமாரர்கள் இருவரின் மனைவியர்களும் முதல் தடவை அவமானமுற்றனரல்லவா? இந்தத் தடவை அவர்கள் தவளை என்ன செய்கிறது, எப்படி ரொட்டி தட்டித் தயார் செய்கிறது என்று பார்த்து வர ஒரு கிழவியை அனுப்பி வைத்தனர். தவளையும் தந்திரசாலி. தவளைக்கு எப்படியோ இந்தச் செய்தி தெரிந்து விட்டது. அதனால் தவளை ரொட்டி மாவை நன்றாகப் பிசைந்து ஒரு உருண்டையாக உருட்டியது. அதை அப்படியே கணகண என்றிருக்கும் அடுப்பு நெருப்பில் போட்டது. இதைப் பார்த்துவிட்ட வேவு பார்க்க வந்த கிழவி, ஓடிப்போய் மூத்தவர்களின் மனைவிமார்களிடம் தவளை செய்ததை அப்படியே கூறினான். அவர்களும் அதே மாதிரி செய்தார்கள்!



இங்கே தவளை, கிழவி போய் விட்டாள் என்று தெரிந்தவுடன், தத்தித் தத்தி வாசற்படி வரை சென்று எட்டிப் பார்த்தது. வெளியில் யாருமில்லை என்று தெரிந்தவுடன், தன் தவளை உருவத்தைக் களைந்து விட்டு வாஸிலிஸாவாக மாறியது. வாஸிலிஸா கை தட்டித் தன் சகிமார்களை அழைத்தான். "தோழி மார்களே, தாதி மார்களே! நான் வீட்டிலிருக்கும் போது சாப்பிடுவேனே மிருதுவான வெள்ளை ரொட்டி, அதே மாதிரியான ரொட்டியைத் தயார் செய்யுங்கள். அது நாளைக் காலைக்குள் வேண்டும். அதனால் இப்பொழுதே வேலையைத் தொடங்குங்கள். நன்றாகச் செய்து தாருங்கள்" என்றான்.

இளவரசன் ஐவான் காலையில் விழித்து எழுந்து மேஜையைப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! அழகான சித்திர வேலைப்பாடுகள் செய்த ரொட்டியிருந்தது. ஆம்; அந்த ரொட்டியின் நாற்புறமும் அழகான சித்திரங்கள் கண்களைக் கவர்ந்தன. மேல் பக்கத்தில் மதில்களும், பெரிய வாசலும் கொண்ட சிறு கோட்டை அலங்கரித்தது.

இதைப் பார்த்ததும் இளவரசன் ஐவான் அடைந்த மகிழ்ச்சி சொல்லி முடியாது. அதை ஒரு பட்டுத் துணியில் நன்றாகச் சுற்றி எடுத்துக் கொண்டு ஸார் அரசனிடம் போனான்.

அப்போது அரசன் தன் மூத்த புதல்வர்கள் கொண்டு வந்த ரொட்டிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்களுடைய மனைவிமார், அந்தக் கிழவி சொன்னதுபோல், ரொட்டி மாவை அடுப்புக் கரியில் போட்டுக் கருக்கிக் கொடுத்திருந்த ரொட்டிகளைக் கொண்டு வந்திருந்தார்கள். அரசன் மூத்த புதல்வன் கொண்டு வந்த ரொட்டியைப் பார்த்தான், அதை அப்பொழுதே வேலைக்காரர்களுக்குக் கொடுக்கச் சொல்லி, அனுப்பி விட்டான்.

அடுத்தவன் கொண்டு வந்ததற்கும் அதே கதிதான் ஏற்பட்டது.

மூன்றாவது மகன் ஐவான் கொண்டு வந்த ரொட்டியைப் பார்த்தான். "ஹா! இதுவல்லவா ரொட்டி! இது புனிதமான பண்டிகை நாட்களில் சாப்பிட வேண்டிய ரொட்டி!" என்றுசொல்லி மகிழ்ந்து போனான்.

* * *

இந்தச் சம்பவம் நிகழ்ந்த மறுநாள், மன்னன் ஒரு பெரியவிருந்து நடத்தத் தீர்மானித்திருந்தான். இந்த விருந்துக்கு ஸார் மன்னன் தன் புதல்வர்களை, அவரவர் மனைவிமார்களுடன் வருமாறு அழைத்தான்.

இதைக் கேட்டதும் இளவரசன் ஐவானுக்கு வருத்தந்தான் ஏற்பட்டது. முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு, வீட்டுக்கு வந்து சேர்ந்தான். தவளை தத்தித் தத்தி வந்து, "இளவரசே! ஏன் வருத்தப் படுகிறீர்கள்? உங்கள் தகப்பனார் உங்களைக் கடிந்து கொண்டாரா, என்ன?" என்று கேட்டது.

"என் தவளையே! என் தலைவிதியை நினைத்து நான் வருத்தப்படாமல் என்ன செய்வது? அப்பா நாளைக்கு ஒரு விருந்து வைக்கப் போகிறாராம். அதற்கு உன்னை அழைத்துக் கொண்டு வரச் சொல்லுகிறார். நாலு பேர் எதிரில் நீதான் என் மனைவி என்று நான் எப்படிச் சொல்லிக் கொள்வேன்? நீதான் எப்படி அங்கு வர முடியும்?" என்றான்.

"இளவரசரே, இதற்காக நீங்கள் மனம் இடிந்து போக வேண்டாம். நீங்கள் தனியாகவே விருந்துக்குப் போய்ச் சேருங்கள். நான் பின்னால் வருகிறேன். ஆனால் திடீர் என்று 'கடபுடா' என்று பெருத்த சத்தம் ஏதாகிலும் கேட்டால் நீங்கள் பயந்து போகாதீர்கள். யாராவது 'என்ன சத்தம் இது?' என்று கேட்டால், 'என் தவளை மனைவி தன் சாரட்டு வண்டியில் வருகிறாள். அந்தச் சத்தம்தான் இது' என்று சொல்லி விடுங்கள்" என்றாள்.

'சரி' என்று ஒப்புக் கொண்டு இளவரசன் ஐவான், தன்னந் தனியாக விருந்துக்குப் போய்ச் சேர்ந்தான். அவன் அண்ணன்மார்கள் மனைவியருடன் வந்து சேர்ந்தார்கள், அந்தப் பெண்கள் முகத்துக்குப் பவுடர் பூசி, கண்ணைப் பறிக்கும் ஆடைகள் உடுத்தி, மற்றச் சிங்காரங்கள் எல்லாம் செய்து கொண்டு வந்திருந்தனர். அவர்கள், தன்னந்தனியாக வந்திருந்த இளவரசன் ஐவானைப் பார்த்துப் பரிகசித்தனர்.



"ஏன், உன் மனைவியை அழைத்து வரவில்லை? அவளை உன் கைக்குட்டையில் சுற்றிக் கையில் எடுத்துக் கொண்டு வந்திருக்கலாமே. எங்கே அப்பா இவ்வளவு சிறந்த அழகியைப் பிடித்தாய்? நிஜமாகத்தான் கேட்கிறோம். உலகத்திலுள்ள அத்தனை சேற்றுக் குட்டையையும் தேடியிருப்பாய் போலிருக்கிறது. இல்லையா?" இவ்வாறு பலவிதமான கேலிப் பேச்சுக்கள் பேசி ஏளனம் செய்தனர்.

இதற்குள் மன்னன் வந்து சேர்ந்தான். அழகிய துணி விரித்து வைக்கப்பட்டிருந்த பெரிய மர மேஜையின் முன்னால் மன்னன், ராஜ குமாரர்கள், நாட்டுப் பெண்கள் மற்றுமுள்ள விருந்தினர் எல்லாரும் உட்கார்ந்தார்கள். ஏதோ பேசிக் கொண்டே விருந்துண்ணத் தொடங்கினர். அப்போது, இருந்திருந்தாற் போல் கடபுடா என்று பெருத்த சத்தம் கேட்டது. அந்தச் சத்தத்தில் அரண்மனையே நடுங்குவது போல் தோன்றியது. வந்திருந்த விருந்தினர்கள் எல்லாம் பயந்து நடுங்கித் தங்கள் இருப்பிடத்தை விட்டு எழுந்து விட்டனர்.

"ஒன்றுமில்லை, பயப்படாதீர்கள்! என் தவளை ராணி தன் சாரட்டு வண்டியில் வருகிறாள்! அவ்வளவுதான்!" என்று நிதானமாகச் சொன்னான் இளவரசன் ஐவான்.

அவன் சொல்லி வாய் மூடுமுன் தங்க மூலாம் பூசிச் சிங்கார வேலைப்பாடுகள் செய்த ஒரு சாரட்டு வண்டியை, ஆறு அழகிய வெண் புரவிகள் வேகமாக இழுத்துக் கொண்டு அரண்மனையின் வாயிலில் வந்து நின்றன.

அந்த வண்டியை விட்டு வானுலக தேவதை இறங்குவது போல் ஒரு அழகிய பெண் இறங்கினாள். அவள் ஆகாய நீல வர்ணத்தில் உடை தரித்திருந்தாள். அந்த ஆடையில் கண்ணைப் பறிக்கும் நட்சத்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. தலையில் சந்திரனைப் போன்று ஒளி வீசும் அழகிய ஆபரணம் துலங்கிற்று.

இப்படி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அழகுடன் வண்டியை விட்டு இறங்கியவள் தான் புத்திசாலி வாஸிலிஸா. அவள் அழகைக் கண்டு அங்கிருந்தவர்கள் எல்லாரும் பிரமித்து மயங்கி நின்றுகொண்டிருந்தனர். அவளோ, நேரே இளவரசன் ஐவானின் கரங்களைப் பற்றி அழைத்துக்கொண்டு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்த மேஜைக்கு முன்னால் போய் உட்கார்ந்தாள்.

ஐவானும் வாஸிலிஸாவும் உட்கார்ந்தவுடன், மற்றவர்களும், தங்கள் சுய நினைவைப் பெற்றார்கள். 'நாம் விருந்துக்கல்லவோ வந்திருக்கிறோம்' என்பது அப்பொழுதுதான் ஞாபகத்துக்கு வந்தது. உடனே அவர்கள், தங்கள் தங்கள் இருப்பிடத்தில் போய் உட்கார்ந்தனர்.

விருந்துச் சாப்பாடு ரொம்ப பலம். வகை வகையான தின்பண்டங்களும் பானங்களும் வழங்கப்பட்டன. விருந்தினர்கள், இளவரசர்கள், அவர்கள் மனைவிமார் எல்லோரும் வேடிக்கையாகப் பேசிச் சிரித்துக் கொண்டே சாப்பிட்டனர். அப்போது வாஸிலிஸா ஒரு காரியம் செய்தாள். அதாவது மேஜைமீது பரிமாறப்பட்ட தின்பண்டங்கள் சில மிகுந்து விட்டன. அவற்றில் சிலவற்றை எடுத்துத் தன் சட்டையின் வலக் கை, இடக் கைத் துணிகளில் மறைத்து வைத்துக் கொண்டாள்.

இதை மூத்த ராஜகுமாரர்களின் மனைவிமார் பார்த்து விட்டனர். அவர்களும் அதேமாதிரி செய்தனர்.

இதற்குள் சாப்பாடெல்லாம் முடிந்தது. நடனம் ஆடும் கட்டம் வந்தது. வாஸிலிஸா தன் கணவன் இளவரசன் ஐவானை அழைத்துக் கொண்டு நடனம் ஆடப் புறப்பட்டாள்.

(அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10 Editor : Mi. Pa. Somasundaram

ஓர் அழகு ராணியின் மேனியோடு நீங்களும் விளங்கலாம்!









நாளொரு மேனியாக
வனப்பெய்துங்கள் . . .

ஆம், சோபிக்கும் எழில்
மேனி பெற விரும்பும் உங்
கள் கனவும் நனவாக முடியும்!
குளித்திடும் ஒவ்வொரு தடவை
யும் ரெக்ஸோனா உபயோகியுங்கள்—
அதன் கேடில் சத்து நிறைந்த நுரை
யை எப்போதும் உங்கள் சருமத்தின்
மீது மிருதுவாகத் தேய்த்து, நீரா
டுங்கள். நாளொரு மேனியாக
உங்கள் சருமம் மேலும்
மேலும் மென்மை
மிகுந்த புது வனப்
பெய்தும்.

1955 ரெக்ஸோனா
அழகுப் போட்டி
யில் வெற்றிபெற்ற
அழகியான "மிஸ்.
ரெக்ஸோனா"




பெரிய சைஸிலும்
கிடைக்கும்.

. . . இயற்கை
யான வழி
ரெக்ஸோனா
உபயோகித்தல்

கேடில்* கலந்த சோப் இது ஒன்றே.

RP. 139-50 TM

REGISTERED No. M. 439
Registered as a Newspaper in Ceylo